வங்காளதேசத்து வித்வான்கள் இவரை வங்காளி என்றும் காஷ்மீரத்தின் விதவான்கள் இவரை காஷ்மீரியன் என்றும் கூறுகிறார்கள். வேறு சிலர் காளிதாஸர் பிறந்த இடம உஜ்ஜைனி என்றும் கூறுகிறார்கள்.

காளிதாஸருக்கு ஒரு ராஜகுமாரியுடன் விவாகம் நடந்தது என்றும் அவளுடைய ஊக்கத்தின் காரணமாகவே இவர் மேகதூதம், குமாரசம்பவம், ரகுவம்சம் முதலிய காவியங்களை உலகோர் வியக்கும்படி சித்தரித்தார் என்றும் கூறப்படுகிறது.

ஒரு உஜ்ஜய்யனி கவிஞர் இவரது பிறப்பிடம் உஜ்ஜைனியில் அருகில் உள்ள ஆம்ரகூடம் என்ற பிரதேசம் ஆகும் என்று அறுதியிட்டு சொல்கிறார்.

ஒருசிலர் வித்ஷா என்னும் இடத்தையும் இவரது ஜென்மபூமி என்கிறார்கள்.

இவர் எழுதியுள்ள காவியங்களில் உஜ்ஜையினியைப் பற்றிய ஆதாரங்கள் நிறையக் கிடைக்கின்றன.

மேகதூதத்தின் பதினோராவது சுலோகத்தில் அவர் உஜ்ஜைனியைப் பற்றி மிக அழகாக சித்தரித்து இருக்கிறார். கவிஞர் உஜ்ஜைனியை சுவர்க்கத்தின் ஒருபாகம் என்கிறார்.

இந்த ரமணீய வர்ணனைகளும் இதயத்தைத் தூண்டும் சம்பவங்களும் நோக்குமிடத்து இவர் உஜ்ஜையினியில் பிறந்தவர்தான் என்பதனை உறுதி செய்கிறது.

காளிதாஸர் ஏதோ ஒரு விதத்தில் குருகுலவாசம் செய்திருக்கிறார் என்பதும் நன்கு தெரிகிறது. ஏனெனில், கவி சில இடங்களில் குருகுலத்தில் கற்றுத்தரப்படும் பதினான்கு வித வித்தைகளைப் பற்றியும் கூறியிருக்கிறார்.

மகாகவி காளிதாஸரின் ஸ்திதி, காலத்தின் சம்பந்தமாகவும் வித்வான்களுக்குள் பல சர்ச்சைகள் இருந்தன.

வெளியான பிரமாணங்களைக் கொண்டு அவர்கள் காளி தாஸரின் சகாப்தியை நியமித்தார்கள்—நிரூபித்தார்கள்.

இவ்விஷயமாக நான்குவித பேதங்கள் உண்டு.

1. காளிதாஸர் ஆறாவது நூற்றாண்டில் வாழ்ந்தவர் ஆவார்.
2. குப்த காலத்தில் இவர் வாழ்ந்ததாக ஆதாரங்கள் பல காண்கின்றோம்.
3. கிருஸ்துவிற்கு முன் இரண்டாவது சாகப்தி என்றும் கூறுகிறார்கள்.
4. சிலர் கிருஸ்துவிற்கு முன் ஒன்றாவது சகாப்தி என்றும் கூறுகிறார்கள்.

ஆறாவது நூற்றாண்டில் மாளவ தேசத்து அரசன் யசோதவர்மன் ஹூணர்களை தோற்கடித்து விக்ரமாதித்ய னிடம் உபாதி பெற்றான். அதனால் தான் விக்ரம சம்வநம் என்ற பெயர் வந்தது.

இவனே காளிதாஸரின் பிறப்பை விக்ரம ஆண்டு 600 என்றும் கிருஸ்துவிற்கு முன்னால் என்றும் கூறி ஸ்திரப் படுத்தினான்.

சில மாமேதகர்கள் காளிதாஸரைப்பற்றி இரண்டாம் சந்திரகுப்தனின் காலத்தில் இருந்தவர் என்கிறார்கள். குப்தர் காலத்து கல்வெட்டுக்களே இதற்குச் சான்றாகும்.

காளிதாஸரின் சாஹித்யங்களிலும் விக்ரமாதித்யனின் வர்ணனைகளும், ராஜா சந்திரகுப்தனின் தலைநகரான உஜ்ஜையினியைப் பற்றியும் வெகு அழகாக வர்ணித்து சொல்லப்படுகிறது.

இந்த விதமான சாகித்யங்களின் மூலம் காளிதாஸர் நான்காம் நூற்றாண்டின் முடிவிலும் ஐந்தாம் நூற்றாண் டின் ஆரம்பத்திலும் வாழ்ந்தவர் என்று நமக்குத் தெளி வாகத் தெரியவருகிறது.

காளிதாஸரின் விக்ரமோர் வசீய நாடகத்தின் மூலம் மேலும் சில உண்மைகள் தெளிவாகத் தெரிகிறது.

காளிதாஸர் தன்னுடைய ரகுவம்ச மகாகாவியத்தில் சூரியவம்சத்து ராஜாக்களை வர்ணித்து இருக்கிறார். இதன் முக்கிய காரணம் விக்ரமாதித்ய ராஜன் சூர்ய வம்சத்தை சேர்ந்தவர் என்பதுதான்!

▢▢

## 2. கவி காளிதாஸரின் காவிய ரசனாக்கள்

சமஸ்க்ருத காவியங்களில் பிரசித்திபெற்ற பல கவிகளும், நாடக கலைஞர்களும் காளிதாஸரைப் பற்றி சிறப்பித்து வர்ணித்துப் பாராட்டியுள்ளார்கள். அவர்கள் காளிதாஸரின் புலமைக்கு அரியாசனம் கொடுத்து கௌரவித்துள்ளார்கள்.

பத்தாம் நூற்றாண்டில் தோன்றிய ராஜசேகர் என்ற கவி மூன்று காளிதாஸர்கள் வாழ்ந்ததாக கூறுகிறார். ஆயினும், எந்த காளிதாஸர் மூலம் நமக்கு சுந்தரமான பல அற்புத காவியங்கள் கிடைத்தனவோ அவரே நமது காளிதாஸர் என்று பெரிய வித்வான்கள் ஒப்புக் கொண்டார்கள் என்பதனை எவரும் மறுக்க முடியாது.

மகாகவி காளிதாஸரின் ருதுசம்ஹாரம், குமாரசம்பவம், மேகதூதம், ரகுவம்சம் என்ற நான்கு சாஹித்யங்கள் மிகவும் பிரசித்தமானதாகும்.

நாடகங்களில் மாளவிகாக்னிமித்ராவும், விக்ரமோர் வசீயமும், அபிக்ஞான சாகுந்தளமும் அபரிதமான புகழுக்கும், கீர்த்திக்கும் அத்தாக்ஷியாக விளங்குகின்றன.

## 6 □ மேகம் விடு தூது

### □ ருதுசம்ஹாரம்

இது காளிதாஸரின் முதல் காவியமாகும். இந்த காவியம் ஆறு பாகங்களாக பிரிக்கப்பட்டு இருக்கிறது. இதில் ஆறு ருதுக்களின் வர்ணனைகள் இருக்கின்றன. பிரத்யேகமாக ருதுவின் வர்ணனை கவியின் பாஷையில் மிகவும் அழகுடன் விளங்குகிறது.

இதன் பாஷை மிகவும் சரளமாக இருக்கின்றது. இதில் கற்பனையைவிட உண்மை அதிகமாக இருப்பதால் சில கவிகள் இவை காளிதாஸரால் எழுதப்பட்டவை அல்ல என்கிறார்கள். ஆயினும் இது காளிதாஸரின் முதல் சாஹித்யம் என்பதனை எவரும் மறுக்கவில்லை.

வஸந்த ருதுவில் ஆம்ரமஞ்சரியை மாந்துளிர்கள் கொண்ட மாமரத்தை நோக்கும் விரஹம் கொண்ட வழிபோக்கன் தன்னுடைய நிலையை வர்ணிக்கிறான்.

காந்தா வியோக பரிகேதித சித்த விருத்தி
ரதுருஷ்ட வாக்வக: ருஸ¬மிதான் ஸஹகாரவிருக்ஷ நா:

### □ மேகதூதம்

மேகதூதம் காளிதாஸரின் மற்ற சாகித்யங்களைக் காட்டிலும் மிகவும் புகழுக்கு உரியதாக விளங்குகிறது. அத்யந்தயமான ஒரு சிறு சம்பவத்தை மையமாகக் கொண்டு அமைந்துள்ள இந்தக் காவியத்தை கவி தன்னுடைய அதி அற்புதமான கற்பனை சக்தியால் ஓர் ஒப்பற்ற காவியமாகப் படைத்து வானளாவப் புகழ் பெற்றார். காளிதாஸர் ஓர் அமரகவி! அற்புதமான எழுத்துலக சிற்பி!

கர்த்தவ்யத்தை விட்டுவிலகிய ஒரு யக்ஷனை குபேரன் தன்னுடைய அளகாபுரியிலிருந்து விலக்கி விடுகிறான்.

அந்த யக்ஷன் ராமகிரியில் இருந்து கொண்டு தன்னுடைய காதலியின் வியோகத்தால் தாளாத துக்கத்துடனும், விரகதாபத்துடனும் மழை காலத்து மேகத்தின்

மூலமாக காதலிக்கு தூது விடுகிறான். இதுவே மேகதூதத்தின் கதை! இது கலை எழில் மிளிரும் ஓர் அனுபவ காவியமாகி இன்றும் நிலைத்து நிற்கிறது.

இந்த காவியத்தில் காளிதாஸர் தமது பிரமாதமான வர்ணனா சக்தியை எழுத்து மூலம் வெளிப்படுத்துகிறார்.

இயற்கையைப் பற்றிய வர்ணனையானாலும் சரி, சௌந்தரிய வர்ணனையானாலும் சரி இரண்டும் அபூர்வமானதாகும். சிருங்காரத்தின் வியோகபக்ஷம் முன் எழுந்து நிற்கிறது.

அளகாபுரிக்கு வரவேண்டிய பாதையை அதிமதுரமான வர்ணனை மூலம் மேகத்திடம் விளக்குகிறார். அளகாபுரி மார்க்கத்தில் வரும் பலவித இடங்களைப் பற்றிய வர்ணனைகள் சொல்ல முடியாத அளவிற்கு சௌந்தரிய வடிவத்துடன் எழுதுகிறார். கவியின் சிறப்பைப் பற்றி என்னதான் சொல்வது!

மேலும் யக்ஷன் மேகத்திடம், "என் காதலிதான் பிரம்மாவால் முதலாவதாக சிருஷ்டிக்கப்பட்ட அழகுத் திருமகள்!" என்று கூறுவதாக கவி கற்பனைத் தேரை கலை வண்ணம் பொங்க ஓட்டுகிறார்.

தன்வி ஷ்யாமா சிகரிதஷனா
பக்வ பிம்பாத ரோஷ்டி
மத்யே க்ஷாமா சகிதஹரிணி
ப்ரேக்ஷணா நிம்னநாபி:
ஸ்ரோணி பாரத லஸகமனா
ஸ்தோக நம்ரா ஸ்தனாப்யாம்|
யாதத்ர ஸ்யாத்யுவதி விஷயே
ச்ருஷ்டி ராத்யேவ தாது: ||

இவ்வாறு யக்ஷன் தனது மனைவியின் நக அலங்காரத்தையும் சிகை அலங்காரத்தையும் சிந்தனையின் சிருங்காரம் கவிபாட வர்ணனை செய்து தூது அனுப்புகிறார்.

மேகவிடு தூதுவின் நடுநாயகமான கருத்து இதுவே யாகும்.

☐ குமாரசம்பவம்

காளிதாஸரின் இந்த மகா காவியம் பதினேழு ஸர்கங் களை கொண்டது. ஆனால் ஒன்பது சர்கம் அடங்கியதே குமாரசம்பவம் என்றும் மற்ற எட்டு சர்கங்களையும் பின்னால் வந்த சில கவிகள் எழுதி முடித்து இருக்கிறார்கள் என்றும் கூறப்படுகிறது. அதனால்தான் ஏனைய சர்க்கங் களில் காளிதாஸரின் கை வல்லமை காணப்பட்டவில்லை என்கிறார்கள். இந்தக் காவியத்தில் காளிதாஸரின் அழகான கற்பனைகள் மிதந்து கிடக்கின்றன.

சிவன் மன்மதனை எரிக்கின்றான். அதன் பிறகு பர்வத குமாரியாக ஜனித்த பார்வதி தவமிருந்து சிவபெருமானை மணம் புரிகிறாள். இந்த பார்வதியின் விவாக வர்ணனை குமார சம்பவத்தின் மணிமகுடமாகத் திகழ்கிறது.

இந்த காவியத்தில் உண்மையான வர்ணனைகளுடன் காவிய அலங்காரமும், கற்பனை வளமும் சேர்ந்து அழகை அள்ளித் தெளிக்கிறது.

காமவாசனையில்லாமல் ஒரு பெண் ஒரு ஆணை நாட காமதேவனின் அவசியம் எத்தனை முக்கியமானது என்பது சிவபார்வதி சினேக பாவத்தின் மூலம் சித்தரிக்கப்படுகிறது. குமார சம்பவத்தின் ரகசியமான ரசனை இதுவே யாகும்!

☐ ரகுவம்சம்

இந்த சாகித்யம் காளிதாஸரின் அந்திம காலத்து கடைசி காவியமாக கருதப்படுகிறது.

இதில் கவி, சூரிய வம்சத்து ராஜாக்கள் திலீபன் முதல் அக்னிவர்மன்வரை பத்தொன்பது சர்கங்களில் ராஜாக்களை வர்ணித்து இருக்கிறார்.

அலங்காரமும், ரஸமும் இந்த சாஹித்யத்தில் ஆங்காங்கே இறைந்து கிடக்கின்றன.

இந்த மகா காவியத்தில் உலகிற்கு பயன்தரும் உபதேச மொழிகளும் நிறைய சொல்லப்பட்டிருக்கின்றன.

''இயற்கை இன்பம் இருந்தாலொழிய ராஜ்யத்தில் சம்ருத்தி இருக்காது. இயற்கையை நாசம் செய்தால் ராஜ்ய மும் நாசமாகிவிடும்!'' என்பன போன்ற உபதேசங்கள் ரகுவம்ச சாகித்யத்தில் காணப்படுகின்றன.

ரகுவம்ச காவியம் கலை அம்சம் மணம் பரப்பும் ஓர் சிருங்காரச் சோலை! தேன் கவிதை சிந்தும் மலர்கொத்து!

## ☐ மாளவிகாக்னி மித்ரம்

காளிதாஸரின் அனுபூதிகளும் லோக விவகாரங்களுள் ப்ரவீணதாவும் இந்த நாடகத்தின் மூலம் நமக்கு கிடைக் கிறது.

சூர்யவம்ச மன்னனான அக்னி மித்ரனுக்கும், மாளவி காவிற்கும் உண்டான காதலைப் பற்றிய ஒரு பிரேம நாடகம்.

இந்நாடகத்தைப் படிக்கப் படிக்க நம் உள்ளத்தில் உற்சாகம் ஊஞ்சலாடும். சிருங்காரம் நடம் புரியும்! வசந்தம் வண்ண மலர் தூவும்!

## ☐ விக்ரமோர்வசீயம்

காளிதாஸரின் மற்றொரு அற்புதமான நாடகம். புருரூவர் ஊர்வசியின் பழைய கதையின் வர்ணனை இதில் உள்ளது.

இந்நாடகத்தில் சம்யோகம், வியோகம் போன்ற சிருங்கார ரஸத்தை உத்தம ரூபத்தில் இயற்கை காட்சி களுடன் சித்தரித்து இருக்கிறார் கவிகாளிதாஸர். வரிக்குவரி தேனின் சுவை! எழுத்துக்கு எழுத்து மலரின் மணம்.

## □ அபிக்ஞான சாகுந்தலம்

''இந்த நாடகம் காளிதாஸரின் சர்வ சிரேஷ்டமான ஒரு காவிய நாடகம்'' என்று பல கவிகள் உணர்ச்சி பொங்க விமர்சனம் செய்துள்ளனர்.

''காவ்யேஷு நாடகம் ரம்யம் தத்ர
ரம்யா சாகுந்தலா!''

பாரத நாட்டு விமர்சகர்கள் மட்டுமல்லாமல் வெளி நாட்டு விமர்சகர்களும் கூட சாகுந்தலத்தைப் பற்றி வெகுவாக விமர்சித்து இருக்கிறார்கள்.

''யௌவனம், சௌந்தரியம், வசந்தம் போன்ற பாவங்களை நீங்கள் நன்றாக அறிய வேண்டுமானால் அபிக்ஞான சாகுந்தலத்தைப் படித்துப் பாருங்கள்'' என்று ஒரு கவி கூறுகிறார்.

இந்த நாடகத்தில் துஷ்யந்த மன்னனைப் பற்றியும் முனிபுத்திரி சாகுந்தலையைப் பற்றியும் அழகிய முறையில் வர்ணித்து சுவையான நாடக கதையாக சொல்லப்பட்டுள்ளது.

ஒவ்வொரு கதாபாத்திரங்களின் வர்ணனைகளும் இயற்கை வர்ணனைகளும் வரிக்குவரி வர்ணஜாலம் காட்டுகின்றன.

''ஆரம்பத்தில் இயற்கை வர்ணனையின் அழகுடன் கூட மங்களமய பரிணாதியின் பூர்ணமும் இதில் சேர்ந்து மத்திய பூமியில் வாசம் செய்வோருக்கு அம்ருதம் கொடுப்பது போல் இருக்கிறது!'' என்று கவி ரவீந்திரர் சிறப்பித்துச் சொல்கிறார்.

## □ காளிதாஸரின் பிரபாவம்

உலகக்கவி காளிதாஸரின் காவ்ய பிரபாவத்தை எத்தனை வர்ணித்தாலும் போதாது.

காளிதாஸர் உலக வழக்கங்கள் எதையும் விட்டு விடவில்லை.

சமூக வாழ்க்கை, நாகரிகம், தார்மீகம் போன்ற உலக வழக்கங்களைக் கொண்டு காவியத்தை அழகு செய்கிறார். எல்லா தோத்திரங்களிலும் கவியின் பிரபாவம் நன்கு வெளிப் படுகிறது.

காளிதாஸரின் காலத்தில் வர்ணாச்ரம தர்மங்களின் முழுமையும் நிறைந்திருந்தது. இதனாலேயே கவி ஆச்ரம தர்மங்களை நன்கு விவரித்து இருக்கிறார்.

பிரம்ம, க்ஷத்ரிய, வைஸ்ய, சூத்திர எனும் நான்கு வர்ணாச்ரம தர்மங்களைப் பற்றியும் கவி, தனது ரசனை களில் நயம்பட எழுதியிருக்கிறார். சமஸ்காரங்களைப் பற்றி யும் மனோரஞ்சமாக சொல்லியிருக்கிறார் கவிஞர்!

மனிதனின் அன்றாட சமூக வாழ்க்கையைப் பற்றியும் கவி நன்கு சிந்தித்து சீரிய முறையில் எழுதியிருக்கிறார்.

மன்னர்களின் ராஜ்ய பரிபாலனம், மக்களுடைய பழக்க வழக்கங்கள், ஆசார அனுஷ்டானங்கள், மக்கள் ஒருவரோடு ஒருவர் பழகும் விதம் இவை எல்லாம் கவிதைகளில் நன்கு விவரிக்கப்பட்டுள்ளன.

லலித கலைகளும், சங்கீதம், நிருத்யம் போன்ற கலை களையும் கவி நன்கு ஆராய்ந்து எழுதியுள்ளார். தந்து வாத்யங்களைப் பற்றியும் கவி நன்கு வெளிப்படுத்தி இருக் கிறார்.

நிருத்ய கலையைப் பற்றியும், கவியின் சாஹித்யத்தில் மிகுவான வர்ணனைகள் அடங்கியுள்ளன. நாட்டிய கலை யிலோ அவரை மிஞ்சியவர் யாரும் இல்லை என்று தான் சொல்ல வேண்டும்!

இதேபோல் கல்வி மேம்பாட்டிலும் கவி குறைந்தவ ரில்லை. வேதம், உபநிஷதம், நீதி சாஸ்திரம், ராஜநீதி, அர்த்த சாஸ்திரம், சகோல சாஸ்திரியம் இவைகளின் சம்பந்

தமாக கவி நன்றாக ஆராய்ந்து ஆலோசித்து சித்தரித்து இருக்கிறார். விஞ்ஞானத்தையும் அவர் விட்டு விடவில்லை.

''சூரியன் பிருத்வியிலிருந்து ஜலத்தை கிரகணம் செய்து ஆயிரம் மடங்கு அதிகமான மழையை பொழிகிறது!'' இவ்வாறு மேகத்தின் உற்பத்தியை பற்றி மிக அழகாக வர்ணித்து இருக்கிறார்.

தூம ஜ்யோதி: ஸலில மருதாம்
ஸன்னி பாத: க்வ மேக: |

காம சாத்திரம், தர்ம சாத்திரம், இதிகாசம், பூகோளம், வியாகரணம் இவைகளும் சைன்ய சாத்திரமும் பற்றிய விவரங்களை காளிதாஸர் நன்கு வெளிப்படுத்தி யிருக்கிறார். ஜ்யோதிஷ சாத்திரத்தையும் கவி வர்ணித்து இருக்கிறார்.

மாளவிகாக்னி மித்ர நாடகத்தில் ஐந்தாவது அங்கத்தில் ஜ்யோதிஷத்தின் உதாகரணம் கொடுத்து இருக்கிறார்.

தார்ஷனீக தோத்திரத்திலும் காளிதாஸர் குறைந்தவரில்லை. வேதாந்தம், யோகம், மீமாம்ஸா இவைகளுடன் கூட பௌத்த தர்சனத்தின் உதாகரணமும் காளிதாஸரின் சாகித்தியங்களில் கிடைக்கின்றன.

வைதீக யுகத்தின் பிரபலமான தேவதைகளின் வர்ணனைகளும் காளிதாஸரின் கிரந்தங்களில் கிடைக்கின்றன. எல்லா வழிகளிலும் கவியின் பிராபல்யம் படிக்கக் கிடைக்கின்றன. இது காளிதாஸரின் சர்வதோமுகி பிரதிபாவின் நிதர்சனம்.

காளிதாஸருடைய வித்வதாவின் சம்பந்தமாக பல கவிகளின் வேறுபட்ட அபிப்பிராயங்கள் இருக்கின்றன. இருப்பினும் எல்லோருமே கவியை மிகவும் புகழ்ந்து கூறியிருக்கிறார்கள்.

புரா கவீனாம் சணநாப்ர சங்கே
கனிஷ்டி கா நிஷ்டதி த காளிதாஸ: |

□□

# 3. காளிதாஸரின் செளந்தர்ய வர்ணனை

காளிதாஸர் செளந்தரியம், பிரேமை இவை இரண்டிலும் அதிக ஆசை கொண்டவர்.

கவியின் செளந்தரியானுபூதியின் தரிசனம் அவருடைய காவியங்களில் சர்வத்ர காணக் கிடைக்கின்றன.

கவியின் செளந்தரிய வர்ணனையினைப் படிப்போர்க்கு மனதில் ஊக்கத்தையும், உற்சாகத்தையும், ஆர்வத்தையும் உண்டாக்குகிறது. அதற்கு காரணம் செளந்தரியத்தினைச் சொல்லும் கவிநயத்தில் பிரேமையும் கலந்து இருக்கிறது.

ரம்யாணி வீக்ஷ்ய மதுராம்ச
நிஷம்ய சப்தான் ।
பர்யுத் சு கோ பவதியத்
சுகி தோவி ஜந்து: ।
தச்சேதஸா ஸ்ம்ரதி
நூனம போத பூர்வம்
பாவஸ்திராணி ஜனனாந்தரஸெள ஹ்ருதானி ॥

''புஷ்பங்களின் மீது சிகப்பு வர்ணங்களை அள்ளித் தெளித்தால் எப்படி இருக்கும்? அல்லது சிகப்பு பவழத்தின் மீது வெள்ளை முத்துக்களை வைத்தால் எப்படியிருக்கும்? இம்மாதிரி ஆனால் அது பார்வதியின் பல்வரிசைகள்!''

மேலும் வஸந்த ருதுவை வர்ணனை செய்தவாறு கவி கூறுகிறார்:

''வஸந்தத்தின் வருகையால் எங்கும் செளந்தரியம் இறைந்து கிடக்கிறது. எல்லாவற்றிலும் உற்சாகத்தின் சாம்ராஜ்யம் பரவிக் கிடக்கிறது. இதன் காரணமாக வண்டுகள்கூட அதன் பிரியமான வண்டுகளின் பின்னால்

ஒடியவாறு புஷ்பங்களிலுள்ள மகரந்தங்களை குலுக்குகிறது. மேலும் கிருஷ்ண மிருகம் எனப்படும் மானின் ஸ்பரிசத்தால் ஆனந்தமடைந்த பெண் மான்கள் கண்களை மூடியவாறு ஆனந்தத்தால் மூழ்கி திளைக்கின்றன. ஆண் மான் தன் கொம்புகளினால் பெண் மானைச் சொறிந்து கொடுக்கிறது'' போன்ற பல வர்ணனைகளைக் காணலாம்.

பெண் சௌந்தரியத்தைப் பற்றி கவி விசேஷ த்யானம் வைத்திருக்கிறார். அவர் இயற்கையின் அழகுடன் கூட பெண்களை பார்க்கிறார். இது காரணத்தால் சகுந்தலையின் ரூபராசியை வஸ்த்ரா வேஷ்டிதம் ஆன பின்னும் ரமணீய ஸ்தீரி என்கிறார்.

ஸரஸி ஜ மனு வித்தம்
ஷைவ லேநாபி ரம்யம்
மலின மபி ஹிமாம் ஷோர்லக்ஷ்ம லக்ஷ்யி தனோதி
இய மதிக மனோக்யா
வல் கலே நாவி தன்வி
கிமிவ ஹி மதுராணாம் மண்டனம்
நாக்ருதீனாம்.''

நாரீமணிகளின் சுகபாவமான சௌந்தரியம் கவிக்கு மிகவும் பிரியமானது போலும்!

அது மட்டுமல்லாமல் ஆடவர்கள் நல்ல அழகுடையவரானால் அவர்களுக்கு ஆபரணமே தேவையில்லை என்கிறார் கவி!

திலீப மன்னன் ராஜ சின்னங்களை எல்லாம் விட்ட பின்பும் மகாதேஜஸ்வியாக இருந்ததன் காரணமாக அவனை யாரென்று அறிய முடிந்தது.

மன்னன் மதம் கொண்ட கஜராசனுக்கு சமானமாக அத்யந்த தேஜஸ்வியாக இருந்தான் என்றும் கவி வர்ணிக்கிறார்.

கவிக்கு வெளி அழகைக் காட்டிலும் உள் அழகுதான் மிகவும் அழகாகத் தெரிந்தது.

ஆகாயம் ஒரு சமயம் நீலமாகவே இருக்கிறது. அவ்வப் போது மேகத்தினால் மூடியும் மழை மூட்டமும் சேர்ந்து கருமையாகவும் வேறு வர்ணமாகவும் தெரிகிறது. ஆயினும், கடைசியில் ஆகாயம் நீலமாகத்தான் இருக்கிறது.

அதேபோல் சமுத்திரமும், நதியும் அலைகளை வீசி னாலும் அவைகளின் உண்மையான நிலை சாந்தமானது தான்.

இவற்றைப் போலவே மனித உள்ளத்தில் வெறுப்பும், அலுப்பும் கோபமும் இருந்தாலும் பிரேமை என்னும் மனோ பாவம் கூடவே இருப்பதால் அந்த பிரேமையே மேலெழுந்து நிற்கிறது!

சௌந்தரியம் சம்பந்தமாக மற்ற கவிகள் எதை ஒளித்து வைத்தார்களோ அதை காளிதாஸர் வெளிப்படையாகவே வர்ணிக்கிறார்.

''பிரேமை என்பது ஒரு அற்புத பாவம். இது ஒரு தபஸ்யா என்கிறார். அக்னியில் புடமிட்டு வைத்த தங்கம் போல் உண்மையான காதல் புடமிட்டு தங்கம் போல் மிளிருகிறது என்கிறார்.

சௌந்தரியம் பாபத்தை உண்டாக்க கூடியது என்பதை கவி ஒத்துக் கொள்ளவில்லை. ''பிரியமான தன் காதலனுக்கு சௌந்தரியம் ஒரு சௌபாக்கியம்!'' என்கிறார்.

சிவனார் காமனை எரித்தவுடன் பார்வதி நினைக் கிறார், ''என் ரூபம், சௌந்தரியம் எல்லாம் வீணாகிப் போயின. எம்பிரான் என்னால் ஆகர்ஷிக்கப்படவில்லை'' என்று தமக்குள் தீர்மானித்து தபஸ் மூலம் தமது சௌந்தரியத்தையே அழிக்க முயற்சி செய்கிறார்.

சகுந்தலாவும் இது மாதிரி தான் தனது இளம் வயதில் துஷ்யந்தன் தன்னை மறந்தவுடன் தபஸ்யா செய்ய போய் விடுகிறாள். இதனால் அவளுடைய ரூப, ராசி வீணானது!

ஆகவே காளிதாஸரின் சித்தாந்தப்படி, ''உண்மையான காதலுக்கு சௌந்தரியம் தேவையில்லை! எனவே தான் இவர்கள் தபத்தை மேற் கொண்டார்கள்!'' என்பது புலனாகிறது.

கவி காளிதாஸர் இயற்கையை மிக அழகாக வர்ணனை செய்கிறார். மாலை சௌந்தரியத்துடன் இயற்கை வளத்தையும் சேர்த்து மகிழ்ந்து போய் காவியங்களை வடித்து இருக்கிறார்.

இவருடைய சௌந்தரிய வர்ணனை மற்ற கவிகளை விடத் தனியானது. இதை யாரும் கடைப்பிடிக்க முடியாது.

□□

## 4. மேக தூதம்-மேகத்தை தூது விடுதல்

மேகதூதத்தை இரண்டு பாகமாக பிரித்து இருக்கிறார் கவி. ஒன்று பூர்வமேகம் - இரண்டாவது உத்திர மேகம்!

பூர்வமேகத்தில் அளகாபுரி செல்ல இருக்கும் மேகம் திற்கு வழிகளைக் கூறியனுப்பும் விவரம் பிரமாதமாக சொல்லப்பட்டிருக்கிறது.

உத்திரமேகத்தில் அளகாபுரியின் சம்ருத்திகளையும், யக்ஷிணியின் பரிபூர்ண சௌந்தரியத்தையும் அவளுடைய விரகதாப வர்ணனையும் வெகு அழகாக சித்தரிக்கப்பட்டு இருக்கிறது.

முதலில் மேகதூதத்தின் வரலாறு என்ன என்பதனைப் பார்ப்போம்!

ஒரு யக்ஷன் தனது கடமையை மறந்து தன் மனைவியின் நினைவில் ஓடி விடுகிறான். இதனால் கோபமடைந்த குபேரன் அவனை ஓராண்டு காலம் மனைவியைப் பிரிந்து வாழ வேண்டும் என்று தண்டனை விதிக்கிறான். அதுவரை அந்த யக்ஷன் ராமகிரி பர்வதத்தில் வசிக்க வேண்டும் என்றும் ஆணையிடுகிறான் குபேரன்!

யக்ஷன் தனது மனைவியின் நினைவாகவே மலைச் சாரலில் மனம் வாடி வருந்துகிறான். அவனுக்கு ஒரு நாள் ஒரு யுகமாக கழிகிறது.

அன்று ஆவணி மாதம்! வளர்பிறைத் திங்கள்! யக்ஷன் மலையின் சிகரத்தைப் பார்த்தவாறு விரகதாபத்துடன் நிற்கின்றான்.

அது சமயம் மலைச் சிகரத்தில் பொங்கி வரும் மேகத்தைப் பார்க்கிறான். அவனுக்கு விரக வேதனை தாங்க முடியாமல் போகிறது.

அவன் அசேத்னமான (அறிவற்ற) அந்த மேகத்திடம் தன்னுடைய காதலிக்கு பிரேமை நிறைந்த (சந்தேசம்) தூது அனுப்புகிறான்.

அவன் புஷ்பத்தை வர்க்ஷித்து மேகத்தை ஸ்வாகதம் செய்கிறான்.

''ஹே மேகமே! நீ அளகாபுரியில் வசிக்கும் என் காதலிக்கு செய்தி கொண்டு போவாயாக! எங்கு பார்த்தாலும் மெல்லிய மிருதுவான காற்று வீசுகிறது. சாதகப் பக்ஷி உனக்கு இடது புறமாக கூவிக் கொண்டே போகிறது. கொக்குகளின் வரிசைகள் ஆகாயத்தில் வரிசையாகக் காணப்படுகின்றன. ஆகாயத்தில் இந்திர தனுஷும் பிரகடனமாகி இருக்கிறது. இதெல்லாம் உன் யாத்திரைக்குத் தகுந்த உத்தமமான நல்ல சகுனங்களாக கொள்வாயாக!''

எனக்காக தூது செல்லும் வழியில் நீ களைப்படைந்தால் பர்வத சிகரங்களில் களைப்பாறுவாயாக! உனக்கு தாகம் ஏற்பட்டால் வழியிலுள்ள அழகிய நதிகளில் தண்ணீர் அருந்தி களைப்பாறுவாயாக! ஆம்ரகூட பர்வதம் உன்னை தன் சிரசின் மேல் ஏற்றுக் கொள்ளும். ஏனெனில் நீ அதன் தாவாக்னியை அணைத்து விடுவதால் அது உன்னிடம் அன்பு காட்டும்.

பிரத்யேக பர்வதங்களில் மயில்கள் தோகை விரித்து உன்னை அன்புடன் வரவேற்கும். இப்படிப் பல நல்ல நிமித்தங்கள் காண்பதால் நீ விரைவில் அளகாபுரி செல்ல முயல வேண்டும்.

தஷார்ணோவின் ராஜதானியான விதிஷா போய் சேர்ந்ததும் அங்குள்ள வேத்ரவதி நதியின் தண்ணீரைப் பருகுவாயாக! பிறகு தாழே உள்ள கிரி என்ற பெயருள்ள மலையில் சற்று நேரம் இளைப்பாறுவாயாக! உன்னுடைய வருகையில் அந்த மலையிலுள்ள கதம்ப மலர்கள் மகிழ்ந்து மலரும்!

வடக்கு பக்கம் நீ போகும்போது கொஞ்சம் கடினமாக இருக்கும். ஆனால், நீ உஜ்ஜையினியின் அழகிய மாட மாளிகையின் மடியில் ஆனந்தமாக சற்று நேரம் தங்கி இருந்திடுவாய்! அங்கு மகாகால சிவபூஜை நடக்கும்.

அந்த பூஜை சமயம் நீ கர்ஜித்து, உனது மிருதங்கம் போன்ற சப்தத்தை அதிகமாக எழுப்பிடுவாய்!

அன்று இரவு உஜ்ஜையினிலேயே தங்கி மறுதினம் வைகறை பொழுது மீண்டும் உனது பயணத்தை தொடங்குவாய்!

வழியில் ஆழமான நதியின் நீரைப் பருகுவாய்! அங்கு உனது பொன்னான நேரத்தை வீணாக்காதே! அங்கிருந்து அக்கணமே புறப்பட்டு தேவகிரிக்குச் செல்வாயாக!

அந்த தேவகிரியில் கார்த்திகேய பெருமான் எழுந்தருளி யுள்ளார். புஷ்பமேகமாக மாறி அப்பெருமானை புஷ்பத்தை பொழிந்து ஆராதிப்பாயாக! அதன் பிறகு நீ சரமண்யாவதி எனும் நதியை கடப்பாயாக! அந்நதியின் தண்ணீரைக் குடித்ததும் நீ முக்தா ஹாரத்தில் இந்திர நீலமணி போல் ஒளிவிடுவாய்!

அங்கிருந்து கிளம்பி தஸபுரம் கடந்து பிரம்மசரிய தேசமான குருக்ஷேத்திரம் சென்று அடைந்திடுவாய்! அங்கு சரஸ்வதி நதியின் தண்ணீரைக் குடித்திடுவாய்! அந்த நீர் உன்னை கருமை நிறமாக்கிவிடும்.

அங்கிருந்து புறப்பட்டு செல்லும்போது கங்கை, நதியை காண்பாய்! அதன் தண்ணீரை நீ குடிக்க நினைத்து வளைந்து போய் பின்னால் மீண்டும் வெண்மையாகி விடுவாய்! அங்கு உனக்கு யமுனை நதியும் கிடைக்கும். இந்த சங்கமத்தை நீ அறிவாய்! அங்கிருந்து மேலே போனால் நீ ஹிமாலய பர்வதத்தை அடைவாய்!

ஹிமாலயத்தின் அனேக விசேஷங்களை பார்த்து கொண்டே வரிசை வரிசையாக பறந்து வரும் ஹம்ஸ பக்ஷிகளை கடந்து, வளைந்து வளைந்து கோணல் மாண லாக வழிவகுத்துக் கொண்டே மேலே செல்வாய்! ஸ்ரீசங்கர ரின் கைலாய மலையைச் சென்று அடைவாய்!

அது சமயம், பார்வதி தேவி கால்நடையாக படிகளில் ஏறி வருவாளேயானால் நீ தேவிக்கு சிகரமடைய உதவி செய்வாயாக! திருக்கயிலாய மலையிலுள்ள மானஸரோவ ரின் தண்ணீரைப் பருகியவாறு மேல் நோக்கி சென்றிடுவாய்! அங்கு அளகாபுரியின் பேரழகை நீ கண்டிடுவாயாக!

□□

## 5. உத்திரமேகம்

அழகாபுரியில் எங்கு பார்த்தாலும் வானத்தைத் தொடும் அழகிய மாளிகைகள்! அலங்கார மண்டபங்கள்! அவைகள் மணிகளினால் மிகவும் அற்புதமாக அலங்கரிக்கப் பட்டு இருக்கும்.

அங்குள்ள இளம் நங்கைகள் மிகவும் அழகுள்ளவர் களாக இருப்பார்கள். அங்குள்ள ஆறு ருதுக்களிலும் பூக்கள் மணம் வீசி விதவிதமாக மலர்ந்து மனதிற்கு மகிழ்ச்சியைக் கொடுக்கும்.

அஷ்ட ஐசுவரியங்களும் நிறைந்திருக்கும் அந்நகரில் துன்பத்திற்கு இடமே இல்லை. இன்பம் எப்பொழுதும் நிலைத்திருக்கும்.

துக்கத்தின் அனுபவம் அவர்களுக்குக் கேவலம் விரக தாபத்தினால்தான் உண்டாகிறது. வேறு ஒரு குறையும் கிடையாது.

அதிக ஆனந்தத்தினால் அவர்கள் கண்களில் ஆனந்தக் கண்ணீர் பெருகுமேயன்றி துக்கத்தினால் ஏற்படும் கண்ணீ ரைச் சற்று கூட காணமுடியாது.

அங்குள்ள யக்ஷர்கள் எப்போதும் யௌவனமாகவே இருப்பார்கள். மூப்பு பிணி என்பதே அவர்களுக்குக் கிடையாது.

இளமைமிக்க அந்த யக்ஷர்கள் இரவில் முத்துமணி மாளிகையில் மேல் மாடத்தில் நிலவு கொட்டும் பால்லொளி யில் கல்பவிருக்ஷத்திலிருந்து எடுக்கப்பட்ட மதுவை குடித்துக் கொண்டே ஆனந்தமடைவர்.

அழகாபுரி நகரத்தில் அமைந்துள்ள தனபதியான குபேரனின் அரண்மனையின் அருகில் எனது இல்லத்தைக் காணலாம்.

அந்த இல்லம் சங்கம்—பதமம் சின்னங்களை தாங்கி சிறப்போடு காணப்படும். எனது இல்லத்திலுள்ள அழகிய கூடத்தில் பச்சை நிறக் கல்லினால் ஆன படிகள் உண்டு.

அங்கு ஒரு அழகிய தடாகம் உண்டு. செயற்கையினால் செய்யப்பட்ட தங்கநிற கமலப்பூக்கள் எப்போதும் அத்தடா கத்தில் மிதந்து கொண்டிருக்கும்.

அந்தக் கமலங்களின் காம்புகள் வைடூரியத்தால் செய்யப்பட்டது. அந்த கமலங்களின் மீது அன்னபக்ஷிகள் மோகமடைந்து வந்து தங்கி களிக்கும்.

அவ்வாறு அந்த குளத்தின்மீது மோகமடைந்த அன்னப் பறவைகள் வேறு எந்த குளத்திற்கும் போவதில்லை.

அடுத்தாற்போல் அங்கு ஒரு க்ரீடை பர்வதம் உள்ளது. அதில் தங்க பழங்கள் குலை குலையாக செய்யப்பட்டு அழகாக வைக்கப்பட்டிருக்கும்.

இந்தச் சின்னங்களை எல்லாம் அடையாளமாக கொண்டு எனது வீட்டை நீ தெரிந்து கொள்வாயாக! அவ் வீட்டில் நீ எனது உயிரினும் மேலான காதலியைக் காண்பாய்!

அவள் பிரம்மாவினால் சிருஷ்டி செய்யப்பட்ட அலங் கார பதுமை! அழகுமிகு பொன்விளக்கு! பெண்களிலேயே மிகவும் சிரேஷ்டமானவள். அழகிய சரீரம்! யௌவனம் அவளிடம் நிரம்பி வழியும்.

சிவந்த உதடுகள்! முத்து பல் வரிசை! கொடியிடை! அந்த சுந்தராங்கி அன்ன நடை பயிலுபவள்! அவள் எப்போதும் சித்தத்திலே என்னைக் கொண்டு ஓர் சித்திரத்தை எழுதிக்கொண்டே இருப்பாள்! அவள் சிந்தை யெல்லாம் எனது நினைவாகவே இருக்கும். விரகதாபத்தி னால் எந்நேரமும் வீணையை மீட்டிடுவாள்; விரக கீதம் பாடுவாள்.

தனக்கு ஏற்பட்டுள்ள துன்பத்தை அவ்வப்போது தான் வளர்க்கும் மைனாவிடம் சொல்லி மன ஆறுதல் கொள்வாள். மனம்விட்டு மைனாவிடம் பேசுவாள்.

''ஹே ரஸீலி மைனா! எப்போதாவது என் ஸ்வாமியை நினைக்கிறாயா? அவர் உன்னை ரொம்பவும் அன்புடன் வளர்த்தாரே'' என்பாள்.

வியோகத்தின் மிகுதி மாதத்தைக் கழிக்க அவள் வாசற்படியில் புஷ்பங்களை எண்ணி எண்ணி வைத்து கொண்டு இருப்பாள். நீ நேராக அவளிடம் போய் ''நான் உனக்கு மித்திரன்! என்று சொல்லி உன்னை அவளுக்கு அறிமுகம் செய்து கொண்டு பிறகு எனது செய்திகளை சொல்வாயாக!''

''ஹே பிரியே! பிரியவதாவின் வடிவத்தில் உன் சரீரத்தைக் கூறுகிறேன். மருண்ட மான்களில் உன் விழிகளை காண்கிறேன். சந்திரனில் உன் முக சௌந்தரியத்தைக் காணுகிறேன்.

உன்னுடைய கேச பாகத்தில் நதிகளின் அலைகளைக் காண்கிறேன். உன் புருவங்களையும் நதியின் அலைகளில் பார்க்கிறேன்.

மயில்களின் இறகுகளின் அழகில் உன் கேச அழகை காண்கிறேன். ஆனால், எனக்கு உன்னுடைய சரீர சுகம் மட்டும் எதிலும் கிடைக்கவில்லை!

நான் வடக்கு திசையிலிருந்து வரும் காற்றை உன்னை எண்ணி ஆலிங்கனம் செய்து மகிழ்கிறேன். அதற்கு காரணம் இந்த மெல்லிய தென்றல் காற்றின் அலைகள் உன் சரீரத்தை முன்பு ஸ்பரிசித்து இருக்கும்.

இதயத்தில் பலவிதமான நம்பிக்கைகளை வைத்துக் கொண்டு இந்த மிகுதி நாட்களைக் கழித்து வருகிறேன். தனியாக வியோக துக்கத்தை சகித்து வருகிறேன். எனது

சாபவிமோசனம் நீங்குவதற்கு இன்னும் நான்கு மாதங்கள் தான் இருக்கின்றன.

விழிகளை மூடி எஞ்சிய நாட்களை உல்லாசமாக கழித்துக் கொள்வேன். பின்னால் நாம் இருவரும் எப்படியும் சரத்ருதுவின் பால் நிலவின் இரவில் சம்யோக சுகத்தின் ஆனந்தத்தை அனுபவிக்கத்தான் போகிறோம்!''

இவ்வாறு யக்ஷன் மேகத்திடம் தனது உள்ளக்கிடக் கைகளை உணர்ச்சியால் தூது விட்டான்.

யக்ஷன் மீண்டும் மேகத்திடம் தொடர்ந்து கூறுகின்றான், ''ஹே சகோதரா! நான் மிகவும் துக்கத்துடன் இருக்கிறேன் என்பதை எண்ணி முதலில் என் காரியத்தை கவனித்து விட்டு பிறகு நீ எங்கு வேண்டுமானாலும் போவாயாக! பகவான் உனக்கு கருணை காட்டுவான். என் மாதிரி நீயும் வியோகமடையாமல் உன் காதலி மின்னலுடன் சேர்ந்து வாழ்க!'' என்று வாழ்த்துகிறேன்!

□□

## 6. மேகதூதத்தில் இயற்கை வர்ணனை

மேகத்திற்கு தூதுவிடும் யக்ஷன், இயற்கையின் அழகை இனிது விளக்குகிறான்.

''ஹே மேகமே! பழுத்த மஞ்சள் நிறத்துடன் கூடிய மாம்பழங்கள் கொத்து கொத்தாகத் தொங்கும் மாமரங் களை ஆம்ரகூட பர்வதத்தின் நாலாபுறமும் ஓங்கி வளர்ந்து நிற்க காணலாம். நீ அதன் மீது உட்கார்ந்தால் நான்கு புறமும் வெண்மையாகவும் நடுவில் மட்டும் கருப்பாகவும் தெரியும். இந்த அழகை தேவ தம்பதிகளான யக்ஷனும், யக்ஷியும் மிகவும் ஆவலுடன் எதிர்ப்பார்த்துக் கொண்டே இருப்பார்கள்.''

''ஹே மேகமே! நர்மதா நதியின் தாரைகளைப் பார்ப்பாய்! அநேக தாரைகளுடன் பாறையின் மீது பெருகி வரும் அந்தத் தாரைகளை கண்டால் உனக்கு எப்படியிருக்கு மென்றால் யானையின் உடலில் பக்தி ரசனாவின் ரேகைகள் வரைந்தது மாதிரி இருக்கும்!''

ரேவாம் த்ருக்ஷஸ்யுபல விஷமே
வின்த்ய பாதே விஷீர்ணாம்
பக்திச் சேதேரிவ விரேசிதாம்
பூதி பங்கே கஜஸ்ய ||

வர்ஷா காலத்தில் மலர்ந்து மணம் வீசி விளங்கும் தாழம்பூவில் அழகினால் நந்தவனங்கள் ஒளி விட்டு பிரகாசிக்கின்றன. மரங்களில் காகம் பலவிதமான கூடுகளை கட்ட ஆர்ப்பரிக்கின்றன.

மேகத்தின் வழியில் தென்படும் நதியின் கரையில் மல்லிகை தோட்டத்தைக் காணலாம்.

அங்கு தோட்டங்களில் யுவதிகள் பூக்களைப் பறிக்கப் போகிறார்கள். இக்காட்சியை கண்டு கவி மேகத்திடம் கூறுகிறார்:

''மேகமே! அந்தப் பெண்கள் வெய்யிலில் பூக்களைப் பறிக்கும் பொழுது அவர்களது கன்னத்தில் வியர்வை கொட்டும். அதனால் அவர்கள் அணிந்திருக்கும் தாமரைப் பூக்கள் வாடிவிடும்.

இந்த சமயம் நீ அங்கு போய் அவர்கள் முகத்தில் சீதள மான நிழலைக் கொடுத்து அவர்களைப் பரிச்சயம் செய்து கொள்! உன்னுடைய மந்தமாருதத்தினால் அந்த மல்லிகைத் தோட்டத்தை வளமடையச் செய்திடுவாய்!

ஹே மேகமே! கருநிற சிந்து உன்னுடைய வியோகத்தி னால் உலர்ந்து விட்டது. கேசத்தின் சிறிய பின்னல் மாதிரி ஒரு சிறு கோடு மட்டுமே எஞ்சியிருக்கிறது. சிறிதளவே ஜலம் அதில் இருக்கிறது.

தடவர்த்தி விருக்ஷங்களின் இலைகள் பழுப்பும், கறுப்பு மாக நிறம் மாறி இருக்கிறது. அந்தச் சிறுநதி உன் மீதுள்ள ஆசையினால் விரக பீடிதமாக இருக்கிறது. அதனால் நீ விரைவில் அதன் துக்கத்தைப் போக்கடிப்பாயாக!

ஹே மேகமே! நிதம்ப பாகத்திலிருந்து நழுவிவிழும் நீல நிற ஜலரூபியாம் புடவையை மூங்கில் ரூபி விரல்களி னால் நாணத்துடன் சரிசெய்து கொண்டே ஓடும் கம்பீர நதியை நீ விட்டுச் செல்ல முடியாது.''

இதே மாதிரி பூர்வ மேகத்தில் இயற்கையின் அனேக ரூபங்களைச் சித்தரித்து இருக்கிறார் கவி!

உத்திர மேகத்தில் பிரக்ருதியின் சார்மீக உத்காடனம் பிரஸ்துத் செய்திருக்கிறார் கவி! இயற்கையே யக்ஷனின் தசையை கண்டு அவனுக்கு சகஜமாக கண்ணீர் வடிக்கிறது என்கிறார்.

□□

## 7. மேக தூதத்தின் விசேஷம்

மேகதூதம் ஒரு ரமணீய கீத காவியம்! தேர்ந்து எடுத் தாற் போல் சப்தங்களைச் சேர்த்து அழகிய முறையில் தயார் செய்திருப்பதே மேகதூதத்தின் லக்ஷணம்!

இதில் ஸ்திரீ, புருஷனின் தேனொழுகும் ப்ரணய கதையை அபூர்வமான சௌந்தரியத்துடன் அமைத்து இருக்கிறார் கவி!

அதாவது பாடம் கற்றுக் கொள்ளும்போது மனதைக் கவரும் இரண்டு வஸ்துக்கள் அதில் அடங்கி இருக்கின்றன.

ஒருபுறம் பாவம் நிறைந்த மதுர கோமள விலாசவதி காமினியின் ரதிலீலை, மற்றொரு புறம் பாவம் நிறைந்த

மதுர கோமள சாந்த பதாவளி! இதுதான் காளிதாஸரின் அமர கவிதைகள்!

பிரஸ்துத காவ்யம், விரஹ காவ்யம். இதில் அலங்கார சாத்திரத்தின் பிரயோகமும் இருப்பதால் காவியத்தின் உண்மையான அழகு மேலும் அழகுடன் பரிணமிக்கிறது.

ஐரோப்பா கண்டம் என்ன? உலகெங்கிலும் தேடினாலும் இந்த மாதிரியான க்ருதி கிடைக்காது என்று அறுதியிட்டுக் கூறலாம்.

□□

## 8. பூர்வமேகம்

### பாடல்: 1

கஷ்சித் காந்தா விரஹகுருணாம்
ச்வாதி காராத் ப்ரமத்த :
சாபே னாஸ்தங்க மித மஹிமா
வர்ஷ போக்யண பர்து : ।
யக்ஷச் சக்ரே ஜனகதனயா
ஸ்நாந புண்யோதகேஷு
ஸ்நிச்தச் சாயா தருஷு வஸதி
ராம கிரியாஷ் ரமேஷ் ॥

தனது கர்தவ்யத்தை மறந்து தனது ப்ரியாவின் பிரிவின் காரணமாக துக்கமயமான ஓராண்டு காலத்தைப் போக்கிக் கொள்ளும் கடுமையான சாபம் அடைந்தான் ஒரு யக்ஷன்.

அவன் சீதாதேவி ஸ்நாநம் செய்த பவித்ர ஜலம் கொண்ட நதியும், அடர்ந்த நிழல் கொடுக்கும் விருக்ஷங்களையும் கொண்ட ராமகிரி என்னும் ஆசிரமத்தில் வசித்து வந்தான்.

குபேரன் யக்ஷனைத் தனது மானஸ்ரோவரின் சுவர்ண கமலங்களைப் பாதுகாக்க வேண்டி நியமித்து இருந்தான்.

ஒரு தினம் இரவு, அந்த யக்ஷன் தான் புதிதாக விவாகம் செய்துகொண்டு வந்திருக்கும் பிரியமான பாரியாளின் வியோகம் தாங்கமுடியாமல் ஒரு ஜாமம் இரவு இருக்கும் போதே தன் மனைவியிடம் ஓடிவிட்டான்.

அப்பொழுது அஷ்டதிக்குகளிலுமுள்ள யானைகள் வந்து அந்த ஸ்வர்ண கமலவனத்தை அழித்து சென்றுவிட்டன.

பொழுது புலரும் காலைப் பொழுதில் இந்த செய்தியை அறிந்த குபேரன் கோபம் கொண்டான்.

கடமையைச் செய்யத் தவறிய யக்ஷனை ஓராண்டு காலம் பாரியாளை விட்டுத் தனியாக எங்காவது போக வேண்டுமென்று கடுமையான தண்டனை கொடுத்தான்! தண்டனையை ஏற்றுக் கொண்ட யக்ஷன் வேதனை மேலிட ராமகிரியை வந்தடைந்தான்.

ஜனக மன்னரின் மகளான சீதாதேவியார் நீராடியதால் பவித்ரமடைந்த நதி பாய்ந்து ஓடும் ராமகிரியில் வனவாச காலத்தில் ஸ்ரீராமர், சீதாலக்ஷ்மணருடன் சில நாட்கள் தங்கி இருந்தார் என்பது வரலாறு!

சீதாபிராட்டியார் நீராடியதால் அந்த நதி ஜகத்பாவனி என்ற பெயர் பெற்று ஓடிக் கொண்டிருக்கிறது.

மத்திய பிரதேசத்தில் இருக்கும் இன்றைய ''ராமகட்'' என்னும் இடத்தை ராமகிரி என்றும், சித்ரகூடம் என்றும் சொல்லப்படுகிறது. இது ஆராய்ச்சியாளர்கள் கண்டுபிடித்த உண்மையாகும்.

கவி வர்ணித்த ஆம்ரகூட பர்வதமும் அமர கண்டத்தின் மிக சமீபத்திலேயே விளங்குகிறது.

பாடல் : 2

தஸ்மின்நத்ரோ கதி சித பலா
விப்ரயுக்த ஸகாமி
நீத்வா மாஸான்கனக வலய
ப்ரம்ஷரிக்த ப்ரகோஷ்ட :
ஆஷாடஸ்ய ப்ரதம திவஸே:
மேகமாஷ்லிஷில் ஷ்டஸானும்
வப்ர கிரீடா பரிணத் கஜ
ப்ரேக்ஷணீயம் ததர்ஷ :

ஒரு பெண்ணினால் பிரிவாற்றாமைக்கு இலக்கான பலஹீனனான யக்ஷன் கைகளிலிருந்து தங்க வளையல்கள் தானாக கீழே நழுவி விழுந்து விடுகின்றன.

கைகளில் வளையல்களே இல்லாத அந்தக் காமிபுருஷன் யக்ஷன் அந்த ராமகிரி மலையில் கொஞ்சநாள் இருந்துவிட்டு பிறகு ஆஷாட மாதத்தின் முதல்நாள் பர்வதத்தின் சிகரத்தில் உள்ள அந்த மேகத்தைக் காண்கிறான்.

அந்த மேகம் எப்படி இருந்தது என்றால் கோணற்பற்களுடன் பிரஹாரம் செய்பவரும் யானைகளைப் போல் இருந்தது என்கிறார்.

ஆஷாட மாதத்தின் கடைசிநாளில் தான் ஸாவன்மாதமும், மேகமும் உண்டாகும் என்று சில வித்வான்களின் கணிப்பு!

பாடல் : 3

தஸ்யஸ்தித்வா கதமபி புர :
கௌது கா தான ஹேதோ
ரன்த பாஷ்ப்ப ஷிசர மனு சரோ
ராஜ ராஜஸ்ய தத்யோ !

மேகா லோகே பவதி
　　சுகனோப்யன்ய தாவருத்தி சேத :
கண்டச்வேஷ ப்ரணயினி
　　ஜனே கிம் புனர் தூர ஸம்தே ||

குபேரனுடைய சேவகன் யக்ஷன் தனக்குள்ளேயே கண்ணீரை அழுத்திக்கொண்டு அசாத்ய தீவரத்துடன் அந்த மேகத்தின் முன்னால் நின்று கொண்டு வெகு காலம் வரை மனைவியை நினைத்துக் கொண்டேயிருந்தான். ஏனெனில், மேகத்துள் கண்டுவிட்டால் சுகமான புருஷனுக்குக் கூட சித்தம் கலங்கிவிடும்.

அப்படியிருக்க ஆலிங்கனம் செய்ய வேண்டும் என்ற அபிலாஷை கொண்ட யக்ஷனுக்குக் கேட்கவும் வேண்டுமா? ஏனெனில் அவன் மனைவி அவளை விட்டு வெகுதூரம் இருக்கிறாளே!

பாடல்: 4

பிரத்யா சன்னே நபஸி
　　தயிதா ஜீவிதா லம்ப நார்தி
ஜீமூதேன ஸ்வகுஷலமயீ
　　ஹாரயிஷ்யன் ப்ரவிருத்திம் |
ஸ ப்ரத்யக்ரை: குடஜ குஸுமை :
　　கல்பிதார்தாய தஸ்மை
பிரீத : பிரீதி ப்ரமுக வசனம்
　　ஸ்வாக்தம் வியாஜஹார : ||

சிராவண மாதம் சமீபத்தில் வருவதால் தனது காதலிக்கு உதவி செய்யும் நோக்கத்துடன் மேகத்தின் மூலம் தன்னுடைய ஆனந்த எண்ணங்களைத் தூது விடுவதற்கு நெஞ்சத்தில் ஆவல் பெருகியது!

யக்ஷன் சந்தோஷமடைந்து முல்லை மலர்களைத் தூவி அர்ச்சித்துக் கொண்டு மேகத்தை அன்புடன் சுவாகதம் செய்கிறான்.

பாடல் : 5

தூமஜ்யோதி : ஸலில மருதாம்
ஸன்னிபாத : கவ மேக :
சந்தேஷார்த்த (க்வ) (எங்கு)படுகரணை:
ப்ராணிபி: ப்ராவணீயா : ।
இத்யௌத் சுக்யாத பரிகண
யன்குஹ்ய கஸ்த்தம் ய யாசே ।
கா மார்தா ஹி ப்ரச்ருதி
கிருபணா ஷ் சேதனா சேத நே ஷீ : ॥

புகை, அக்னி, ஜலம், வாயு இதனுடைய சம்மிஷ்ரணத்தினால் ரூபம் கொண்ட மேகம் எங்கே? இந்திரியங்களை கொண்ட பிராணிகளின் மூலம் யோக்ய சந்தேசம் அனுப்பும் விஷயம் எங்கே?

இந்த விஷயத்தின் தர்க்கத்தை கொண்டு யோசிக்காமல் யக்ஷன் அந்த மேகத்திடம் பிரார்த்தனை செய்கிறான்.

ஏனெனில் காமாக்னியில் எரிந்து கொண்டிருக்கும் அவனுக்கு ஜடசேதன் எல்லாமே ஒன்றாகத்தான் தெரியும். ஏகமான ஆதங்கம் மனதில் இருப்பதால் இப்படிச் செய்கிறார்கள். ஜடசேதனுக்கு வித்யாசம் தெரிவதில்லை!

பாடல் : 6

ஜாதம் வம்ஷே புவனவிதிதே
புஷ்கரா வருத்த கானாம் :
ஜானாமி த்வாம் ப்ரக்ருதி புருஷம்
காமரூபம் மதோன : ।
தேனார்த்தித்வம் த்வயிவிதிவஷாத்
தூர பந்துர்கதோஹம் ।
யாஞ்சா மோகா வரமதிகுணே
நாகமே ஸப்த காமா ॥

ஹே மேகமே! நான் உன்னை பிரசித்தமான மக்களால் அறியப்பட்ட புஷ்கரம் என்றும், ஆவர்த்தக் குலத்தில் பிறந்து இச்சை பிரகாரம் ரூபத்தை மாற்றிக் கொள்ளும் இந்திரனின் பிரதான புருஷன் என்றும் நினைக்கிறேன். நான் அறிவேன்.

இதனால்தான் நான் உன்னை ஆச்ரயித்தேன். என் காதலியைப் பிரிந்து வெகுதூரம் இருக்கும் நான் உன்னிடம் யாசக பாவத்துடன் வேண்டிக் கொள்கிறன்.

நல்ல வம்சத்து குணமான மனிதரிடம் யாகம் கேட்பது ஒரு வேளை வீணானாலும் பரவாயில்லை. ஆனால் அதர்ம மனிதரிடம் யாசகம் கேட்டு அது ஒரு வேளை நடந்தாலும் அது நல்லது அல்ல!

பாடல் : 7

ஸந்தாவ்தானாம் த்வமஸி சரணம்
தத்பயோத பிரியாயா :
ஸந்தேஷம் மே ஹர
தனபதி குரோத விஷ்வேஷிதஸ்ய |
கன்தவ்யா தே வஸதிரலகா
நாம யக்ஷேஷ்வராணாம்
பாஹ்யோ த்யான ஸ்திதஹர
சிரஷ் சந்திரி கா தௌத ஹர்ம்யா ||

''ஹே மேகமே! நீ தாபத்தினால் துடிக்கும் மக்களுக்கு ரக்ஷகன் போன்றவன். அதனால் தான் நான் கூறுகிறேன்! தனபதி குபேரனின் கோபத்திற்கு உள்ளாகி - என் காதலியைப் பிரிந்து நிற்கும் எனக்காக தூது போய் அவளிடம் என் செய்தியைக் கூறுவாயாக!''

''நீ யக்ஷர்களின் பிரதான நகரமான அளகாபுரி என்னும் நகருக்குப் போக வேண்டும். அங்கு வெளிப்பக்கம் நந்தவனத்தில் அமர்ந்திருக்கும் சிவனாரின் சந்திர கலையின் ஒளியால் அரண்மனை துடைத்து விட்டாற் போல் தோன்றும்!''

### பாடல் : 8

த்வாமாரூடம் பவன பதவி
முத்க்ருஹீதால காந்தா:
ப்ரே ஷிஷ்யந்தே பதிக வனிதா :
ப்ரத்ய யாதாஷ்வ ஸத்ய:
க:ஸன்னத்தே வரஹ்விதுரா
த்வய்யுபே க்ஷேத ஜாயாம் ந
ஸ்யாதன்யோப்யஹமிவ
ஜனோ ய: பராதீன விருத்தி: ।

காற்றின் மார்கம் ஆகாயத்தில் மேலே ஏறியிருக்கும் உன்னை வழி போக்கர்களின் மனைவிமார்கள் தலை முடியை முன்னால் முடிந்து கொண்டு உன்னைப் பார்ப்பார்கள்.

ஏனெனில் நீ உன்னைப் பெருக்கெடுத்துக் காட்டும் போது ஏற்கனவே வியோகத்தில் வாடும் ஸ்திரீகளை யார் காப்பாற்றுவார்? அவர்கள் என் போல் மற்றோரின் ஆதீனத்தில் வாழ்க்கை நடத்துவார்களா என்ன?

### பாடல் : 9

தாம் சாவஷ்யம் திவஸ கணனா
தத்பராமேக பத்னி
மவ்யா பன்னாம விஹ்தகதிர் த்ரக்ஷ்யஸி
ப்ராதுர் ஜாயாம்
ஆஷா பந்த: குஸீம ஸத்ருஷம்
ப்ராயஷோ ஹ்மங்க நாநாம்
சத்ய: பாதி ப்ரணயி ஹ்ருதயம்
விப்ர யோகே ருணத்தி ॥

''ஹே மேகமே! நீ முதன் முதலில் அவதியின் தினத்திற்கு முன்பே போனாயானால் நாட்களை எண்ணி கணக்கிட்டு வரும் உன் மதனியான அந்த பதிவிரதா

*ஸ்திரீயை அவசியம் பார்ப்பாய்! அவளை ஜீவிதத்துடன் பார்ப்பாய்!*

*ஏனெனில் நம்பிக்கையினால் இருந்து வரும் அவள் இதயம் பூவைப் போன்று மிருதுவானது. ஆகவே விரகத்தினால் சீக்கிரம் கீழே விழ விருக்கும் ப்ரேமி இதயத்தை உன் வரவு தடை செய்து நிற்கும்!''*

பாடல்: 10

*பந்தம் மந்தம் நுததிபவனஷ்*
*சானுகூலோ யதாத்வாம்*
*வாமேஷ் சாயம் நததி மதுரம்*
*சாதகஸ்தே ஸகதந்:*
*கர்மா தானக்ஷண பரிசயான்னுன*
*மாபத்த மாலா:*
*ஸேவிஷ் யந்தே நயன சுபகம்*
*கேபவந்தம் பலாகா:*

*''எப்படி காற்று மந்தமாகவும், மிருதுவாகவும் மெதுவாகவும் வீசி உன்னைச் சந்தோஷமடையச் செய்கிறதோ, உன்னுடைய இடது சாரியில் பபீஹா பக்ஷிகள் மதுரமான ஸ்வரத்துடன் சப்தம் செய்து கொண்டே போகிறதோ அதனால் நிச்சயமாகிறது.*

*ஏனெனில் கர்பதூரண ரூபி உத்சவத்தை அப்யாசம் செய்ய வேண்டி செல்கிறது போலும்! மேலும் ஆகாயத்தில் வரிசை வரிசையாகப் போகும் கொக்குகள் உன் கண்களுக்குக் குளிர்ச்சி தரும், உனக்கு இலைகள் எல்லாம் அழகாக சேவை செய்யும்!''*

### பாடல் : 11

*கர்த்தும்யச்ச ப்ரபவதி மஹிமுச்சி*
*லோன்த்ராம வந்த்யாம்*
*தச்ச்ந்த்வா தே ச்ரவணசுபகம்*
*கர்ஜிதம் மானஸோத்க:*
*ஆ, கைலாஸாத விஸகிஸ லயச்சே*
*த பாமேதயவன் த:*
*சம்பத்ஸ்யன் தேநவஷி பவதோ*
*ராஜஹம்ஸா: ஸஹாயா: ||*

பூமியிலிருந்து கிளம்பியிருக்கும் பயிர்களின் முளைகளையும், பயிரை விருத்தி செய்வதிலும் நீ மிகவும் கெட்டிக்காரன்!

காதுகளுக்கு இனிமையான உன்னுடைய கர்ஜனையைக் கேட்டு மானஸரோவரின் சுகத்திற்காக உத்சுகமான கமல புஷ்பத்தின் நுணி பாகமான கமல நாளத்தை எடுத்து வழியில் போஜனமாக சாப்பிட்டுக் கொண்டே போகும் ராஜஹம்ஸம் உனக்கு ஆகாய மார்க்கத்தில் துணையாகி விடும்.

### பாடல் : 12

*ஆப்ருச்சஸ்வ ப்ரியசக மமு*
*துங்க மாலிங்கய ஸைலம் |*
*வந்த்யை: பும்ஸாம் ரகுபதி*
*தைரகிம்த மேகலாஸ*
*காலே காலே பவதி பவதோ*
*யஸ்ய ஸம்யோக மேத்ய*
*ஸ்நேஹவ்யக்திஷ் சிர விர ஹ ஜ*
*முந்சதோ பாஷ்ப முஷ்ணம் ||*

''மனிதர்களினால் பூஜிக்கப்படும் ஸ்ரீராமச்சந்திரனின் சரணங்களிலிருந்து இடுப்பு பாகம் வரை சிம்ஹமாக இருக்கும் பிரியமித்ரா! இந்த உயரமான மலை சிகரங்களை ஆலிங்கனம் செய்து கொண்டு உத்தரவு கேள்!

சமயத்தில் உன்னுடைய சம்வர்த்தத்தையடைந்து தீர்க கால வியோக அவதியால் சூடான கண்ணீரைப் பொழியும் ஒருவரின் சிநேகம் உனக்கு உண்டாகும்!''

பாடல் : 13

மார்க தாவச்ச்ருணு கதயதஸ்த்வ
த் ப்ரயாணானுரூபம்:
சந்தேஷம் மேததனு ஜலத
ஸ்ரோஷ் யஸி ஸ்ரோத்ரபேயம் I
கின்ன: கின்ன: சிகரிஷு பதம்
ந்ஸ்ய கந்தாஸி யத்ர
க்ஷீண: க்ஷீண: பரிலகு பய:
ஸ்த்ரோதஸாம்: சோபபுஜ்ய:

''ஹேம மேகமே! இப்பொழுது என்னிடம் உன்னுடைய யாத்திரையின் மார்க்கத்தைக் கேட்டுத் தெரிந்து கொள்! ஒரு வேளை களைத்து போனால் மலைகளின் மீது கால்களை வைத்து விச்ராம் செய்து கொள்!

மிகவும் களைத்து விட்டால் அல்லது க்ஷீணமடைந்து விட்டால் அங்குள்ள நதிகளில் கொஞ்சம் தண்ணீர் பருகி விட்டு பிறகு புறப்படுவாயாக! பின்னால் காதுகளைக் குளிரவைக்கும் என் சந்தேசத்தைக் கேட்டுக் கொள்!''

பாடல் : 14

அத்ரே: ச்ருங்கம் ஹரதி: பவன:
கிம்ஸிதித்யுன் முகிபிர்:
துருஷ்டோத்ஸாஹாச் கித சகிதம்
முக்தாசித்தாங்க நாபி:
ஸ்தானாதஸ் மாத் ஸரஸநி சூலா
துத் பதோ தங்கமுக: கம்:
திங்க நாகானாம் பதி பரிஹரன்
ஸ்தூல ஹஸ்தாவலே பான் II

''வாயு, மலை உச்சியில் வெகு தீவிரமாக வீசும். இதே நினைப்பில் நீ கீழே மேலே பார்த்தவாறு நிற்கும் அபலைப் பெண்களையும் சாதுக்களின் பெண்களையும் கண்டு அத்யத்சமான சகிதமடைந்து ஆச்சரியமடைந்து நின்று விடாதே!

உற்சாகத்துடன் நீ செல்லும் மார்க்கத்தில் பிரஹாரம் செய்யக் காத்திருக்கும் திக்கஜங்களின் ப்ரகாரத்திற்கு ஆளாகாமல் அழகிய மூங்கிற் புதரின் நடுவில்போய் அங்கிருந்து வடக்கு திசை வழியாக ஆகாயத்தில் பறந்து செல்வாய்!''

பாடல் : 15

ரத்னச் சாயா வியதிகர: இவ
ப்ரேக்ஷ்ய்மேதத் புரஸ்தாத்:
வல்மீகாக்ராத் ப்ரபவதி தனு:
கண்ட மாகண்ட லஸ்ய |
யேன ச்யாமம்பு வரதிதராம்
காந்தி மாபத்ஸ்யதே
பர்ஹேணேவ ஸ்புரிதருசினா
சோப வேஷஸ்ய விஷ்ணோ:||

ரத்தினங்களினால் அதன் காந்தியைக் கலந்தது போல் தென்படும் இந்த இந்திர தனுஷின் வானவில்லின் ஒரு பாகம் எதிரில் பாம்பின் மேலே எழுந்து காண்கிறது.

இதனால் உன்னுடைய ச்யாமள வர்ண சரீரம் மின்னும். மயில்களின் தோகை போல் சோப வேஷதாரியான கிருஷ்ணனின் சரீரத்தைப் போல் அத்யதிகமான சோபையைக் கொடுக்கிறது. அதாவது ஸ்ரீ கிருஷ்ணனைப் போல் ச்யாமவர்ணத்தினை நீ பெற்றிடுவாய்!

## பாடல் : 16

த்வய்யாத்தம் க்ருஷிபலமிதி
ப்ரூ விலாஸான பிக்ஞை: |
ப்ரீதி ஸ்நிக்தைர் ஜனபத வது
லோசனை: பீயமான:
சத்ய: ஸீரோத்கஷண சுரபி
க்ஷேத்ரமாரு ஹ்ய மாலம்;
கிஞ்சித் பஷ்சாத் விரஜ
லகுகதிர் புய ஏவோத்தரேண ||

''வயல் வெளிகளின் உழவு மேம்பாட்டின் பலன் உன் ஆதினத்தில் இருக்கிறது. இதே காரணம் புருவத்தை அசைக்க கூடத் தெரியாத கிராமத்தில் பெண்களின் நயனங் களினால் பார்க்கக் கூடிய மாளவ தேசத்தில் ஏர் உழுதலி னால் நல்ல மணம் கிடைக்கும்.

அந்த சுகந்தமான நறுமணத்துடன் மேற்கு பக்கம் போவாயாக! அங்கிருந்து மிகவும் வேகமான கதியுடன் வடக்குப் புறமாக மேலே செல்வாய்!''

## பாடல் : 17

த்வாமாஸார ப்ரஷமி த வனோ
பப்லவம் சாதுமூர்தனா|
வக்ஷயத்ய த்ருத்வஷ்ரம பரி கதம்
ஸானமானாம்ர கூடா: |
ந க்ஷுத்ரோ பி ப்ரதம சுக்ருதா
பேக்ஷயா சம்ஷ்ரயாய
பராப்தே மித்ரே பவதி விமுக:
கி புனர்யஸ்த தோச்சை: ||

''ஆம்ர கூட பர்வதம் மழையின் தாரையினால் தனது தாவாக்னியைச் சாந்தம் செய்து கொண்டு இருக்கும். யாத்திரை மார்க்கத்தினால் களைப்படைந்து விட்ட உனக்கு அது சாதகமாக களைப்பாற இடம் கொடுக்கிறது.

கீழான மனிதர்கள் கூட ஆசிரமத்திற்கு நண்பர்கள் வந்தால் முதலில் செய்த உபகாரத்தை நினைத்துப் பின்னால் முகம் திருப்பாமல் இடம் கொடுப்பார்கள், அது போல் நீயோ எத்தனையோ உயரத்தில் இருக்கிறாய்! உனக்கு உபகாரம் செய்ய கேட்கவும் வேண்டுமோ?

பாடல்: 18

சன்னோ பாந்த பரிணத பல
த்யோதிவி: கானனாம் ரை
ஸ்த்வய் யாரூடே சிகர மசல:
ஸநிக்த வேணிஸ வர்ணே:
நூநம் யாஸ்யத்ய மர மிதுன
ப்ரேக்ஷணியா மவஸ்தாம்
மத்யே ச்யாம: ஸ்தன இவ:
புவ: சேஷ விஸ்தார பாண்டு: ||

ஹே மேகமே! பழுத்த பழங்களால் ஒளிவிடும் கானகத்தின் ச்ராமத்தினால் மூடப்பட்டிருக்கும் ஆம்ரகூட பர்வதம் கோமளமாக கேசாவளி வேணி மாதிரி மேலே மேலே போக இருக்கும். உனக்கு சேஷமான அகன்ற பாகம் வேணியைப் போல் தோன்றும். அங்கிருந்து பூமியைப் பார்த்தால் அது மார்பகம் போல் விளங்கும். இந்த அழகை தேவ தம்பதிகளாக பார்த்து அனுபவிக்கும் படியான நிலையை உண்டாக்கும்!''

பாடல்: 19

ஸ்தித்வா தஸ்மின் வனசர
வது புத்த குஞ்சே முகூர்த்தம்
தோயோத் ஸர்கத்ரு
ததர கதிஸ்தத்பரம் வர்த்ம தீர்ண:
ரேவாம் திருஷ்யஸ்யூ பல விஷாமே
விந்த்யபாதே விஷீர்ணாம்
பக்திச் சேதைரிவ விர சிதாம்
புதிம அங்கே கஜஸ்ய

வனத்தில் வாசம் செய்கின்ற பெண்கள் மூலம் உபயோகிக்கப்பட்ட குஞ்சலங்களுடன் கூடிய அந்த ஆம்ர கூட பர்வதத்தின் மீது கொஞ்ச நேரம் தங்கி ஜலத்தைப் பொழிந்திடுவாய்.

பின்னர் பாரம் நீங்கியதும் லேசான உடலைக் கொண்டு நீ மேலும் வழியை வகுத்துக் கொள்வாய்.

ஆங்காங்கே பாறைகள் இருப்பதால் இங்கும் அங்கு மாகப் பெருகும் நீரைக் கடந்திடுவாய்.

விந்தியாசல பர்வதத்தின் தடவர்த்தி பாகத்தில் நீண்டு இறைந்து இடக்கும் அந்த இடத்தை நீ பார்க்கும் பொழுது, யானையின் முதுகில் கோடுகள் சித்திரம் எழுதினாற்போல காணப்படும்.

அதாவது நதியின் பல தாரகைகள் யானையின் முதுகில் கோடிட்ட மாதிரி அமைந்திருக்கும் என்பது கவியின் வியாக்கியானம்.

## பாடல் : 20

தஸ்யா ஸ்திக்தைர் வனகஜ மதைர்வாஸிதம்
வான்த விருஷ்டிர் ஜம்பூ
குஞ்ச ப்ரிதி ஹரதரதம்
தாய மாதாய கச்சே : |
அந்த: ஸாரம் கன துலயியு
நானில: சஷ்யதி த்வாம்,
ரிக்த: ஸர்வோ பவதி ஹிலகு:
பூர்ணதா கௌரவாய ||

ஹே மேகமே! மழையைப் பொழிந்து விட்ட நீ வன யானைகளின் மதத்தினால் வரும் சுகந்தத்தை முகர்ந்து மகிழ்வாய்.

நாவற் பழ கொத்துக்கள் மூலம் தடை செய்யப்பட்ட வேகமாக ஓடும் நர்மதா நதியின் தண்ணீரை எடுத்துக் செல்வாய்.

அவ்வாறு பலமான ஜலத்தை எடுத்துப் போகும் உன்னைக் காற்று அசைக்க முடியாது. ஏனெனில் காலியான ப்ரத்யேக வஸ்து ஒரு போதும் கனக்காது; லேசாகவே இருக்கும்.

பூர்ணமாக அது இருந்தாலும் அது எப்பொழுதும் கன மாகவே இருக்கும் என்பது உண்மை.

பாடல் : 21

நோப த்ருஷ்ட்வா ஹரித கபிஷம்
கேஸரை ரர்தரூடை
ராவிர்பூத ப்ரதம முகுலா:
கந்தலீஷ்ச சானு கச்சம் |
ஜக்த வாரண் யேஷ்வ திகசுரபிம்
கந்த மாக்ராய சோர்வ்யா;
ஸாரம் காஸ்தே ஜலல வமுசக
ஸூசயிஷ்யந்தி மார்கம் ||

பாதி வரை முளை முளைத்திருக்கும் கேசரி பூக்களும், பச்சை மஞ்சள் நிறமான கதம்ப பூக்களையும் பார்த்து சேற்றில் முதன் முதல் பிரகடமான கந்த புஷ்பங் களையும் சாப்பிடுவாய்.

வனத்தில் அதிகமான சுகந்தத்துடன் காணப்படும் இயற்கை சுகந்தங்களை முகர்ந்து விட்டு ஜலபிந்து பொழிந்த வண்ணம் தூது செல்லும் உனக்கு—மான்களின் கூட்டங்கள் வழி வகுத்துக் காட்டும்.

பாடல் : 22

அம்போ பிந்து க்ரஹண
சது ராம்ச்சாத கான் வீக்ஷமாணா:
ச்ரேணி பூதா: பரிகணநயா
நிர்தி ஷன்தோ பலாகா:
த்வாமா ஸாத்யாத்ய ஸ்தனிதஸமயே
மானயிஷ்யன்தி சித்தா:
ஸோத் கம் பாநிபிரிய
ஸஹசரி சம்ப்ரமா லிகிம் தானி

ஜல பிந்துக்களைப் பிடிக்கவல்ல சதுரமான சாதக பக்ஷிகளைப் பார்த்துக் கொண்டே வரிசையாக ஆகாயத்தில் கோடிட்டவாறு செல்லும் கொக்குகளின் கூட்டத்தை எண்ணிடுவாய்.

சித்த புருஷர்கள் உன்னுடைய கர்ஜனையால் பய மடைந்து தங்களது பிரியமான சஹசரியாக்களுடன் பயத்தின் காரணமாக ஆலிங்கனம் செய்துக் கொண்டு உனக்கு வணக்கம் செலுத்துவார்கள்.

பாடல் : 23

உத்பஷ்யாமி த்ருதமபி ஸகே
மத்ப்ரி யார்த்தம் யியாஸோ:
காலக்ஷேபம் ககுப சுரபௌ
பர்வதே பர்வதே தே!
சுக்லாபாங்கை: ஸஜல நயனைக்!
ஸ்வாக தீக்ருத்ய கேகா:
ப்ரயுத்யா த: கதமபி பவான்
கன்து மாஷு வ்யவஸ்யேத் !!

ஹே மித்ர: என் பிரியாவிற்காக சீக்கிரம் போக வேண்டி இருந்தும் நீ குட புஷ்பத்தின் சுகந்தம் வீசும்

பரத்யேக மலை சிகரங்களில் நேரம் ஆகிவிடும். ஆயினும் சமாளித்து, சீக்கிரம் போக ஏற்பாடு செய்!

ஆனந்தத்தினால் கண்களின் கண்ணீர் விடும் மயூரஸ் களின் சப்தங்களில் உன்னுடைய விவாஹத்தின் பொருள் உணர்ந்து சீக்கிரம் எப்படியாவது மேலே செல்வா யாக:

பாடல்: 24

பாண்டு சாயோ பவன ப்ருதய
கேதகை: சூசி பின்னை
நோடாரம் பைர்க்ருஹம்
பலிபுஜாமாகுல க்ராம சைத்யா:
த்வய்யாசன்னே பரிணத
பலச்யாம ஜம்பூப வநாந்தா:
ஸம்பத்ஸ்யந்தே கதிபய தினஸ்தாயி
ஹம்ஸா தஷார்ணா:

ஹே மேகமே! நீ அருகில் இருப்பதால் தஷார்ண தேசத்தின் மொட்டுக்கள் மலர்ந்து அதன் முன் பாகம் தாழம்புவினால் பவனம் முழுவதும் மஞ்சள் நிறமாகி விட்டது.

அதாவது உபவனத்தை மஞ்சள் சூழ்ந்திருக்கும், காகங்கள் கூடு கட்ட முயன்று கொண்டு இருக்கும்.

கிராமத்துக் கோவில்களில் அவை கூடு கட்டும். பழுத்த நாவற்பழத்தின் காரணமாக கருத்து இருக்கும் வனம் ரமணீயமாக இருக்கும்.

கொஞ்ச நாட்களே தூங்கும் ஹம்ஸ பக்ஷிகளின் கூட்டத்திலிருந்து அந்த கிராமம் விடுதலையாகி விடும்.

பாடல் : 25

*தேஷாம் திக்ஷு ப்ரதித விதிஷா*
*லக்ஷணாம் ராஜதானீம்*
*கத்வா ஸத்ய: பலமவி கலம்*
*காமுக த்வஸ்ய லப்தா!*
*தீரோ பான்தஸ்த நித சுபகம்*
*பாஸ்யஸி ஸ்வாது யஸ்மாத்*
*ஸப்ரூ பங்கம் முகமிவ*
*பயோ வேத்ர வத்யாச்ச லோர்மி*

*திசைகளில் சிறந்த விதிஷா என்ற பெயருடன் பிரசித்தி பெற்ற ராஜதானி சென்றதும் அங்கு நீ காமுகனாகி விடுவாய்!*

*ஏனெனில் நீ மேலும் சஞ்சலமான அலைகள் கொண்ட வேத்ரவதி நதி நாயிகாவின் அதரங்களைப் போல நீ அந்த அழகிய தண்ணீரைப் பருகி மேன்மேலும் சந்துஷ்டி அடைந்திடுவாய்.*

பாடல் : 26

*நீசைராக்யம் கிரிமதி வஸேஸ்தத்ர*
*விஷ்ராம ஹேதோ*
*ஸ்த்வத் ஸம்பர் காத்து புலகிதமிவ*
*ப்ரௌட புஷ்பை: கதம்பை:*
*ய: பண்யஸ்த்ரீரதி பரிமலோத்காரி*
*பிர்ணாகரான*
*முத்தமானி ப்ரத்யதி*
*சிலா வேஷ்ம பியௌ வநாநி*

*அங்கு விதிஷா நகரத்தில் உனக்குக் களைப்பாற மலர்ந்த கதம்ப புஷ்பங்களைக் கொண்ட வனம் இருக்கும் அது உன்னுடைய சம்பர்சத்தினால் ரோமாச்சிதமடையும்.*

பின் நீசை என்னும் பெயருள்ள பர்வதத்தின் மீது கொஞ்சம் இளைப்பாறுவாயாக!

அது வேஷ்யாக்களின் யௌவன சம்பந்த ரதி கிரீடா சம்பந்தமான சுகந்தத்தைப் பரப்பும்.

கல்லினால் செய்யபட்ட குகைகள், நகர நிவாஸி களின் உதக்ருஷ்டயௌவனத்தை வெளிப்படுத்துகிறது.

பாடல்: 27

விஷ்ராந்த: ஸன்வ்ரஜ
வன நதிதீர ரஜாதானி ஸிஞ்ச
ன் னுத்யானானாம் நவஜல கணைர்
யூதி காஜால பானி
கண்டஸ் வேதாவ நயன ருஜாக்லாந்த
கர்ணோத் பலானாம்
சாயாத் தானத் க்ஷண் பரிசித:
புஷ்ப லாவீ முகானாம்

ஹே மேகமே! அங்கு நீ இளைப்பாறிய பின்னர் வன நதிகளின் ஓரத்தில் உண்டாகியிருக்கும் உபவனங்களில் பூத்து இருக்கும் முல்லைப் பூக்களின் மொட்டுக்களின் தண்ணீரைத் தெளித்து விடுவாய்.

காதுகளில் உலர்ந்து போன கமல புஷ்பங்களைக் கொண்ட ஸ்த்ரிகளின், பூக்களைக் கொய்யும் அவர்களின் கன்னத்தில் கொஞ்சம் நிழல் கொடுத்துக் கொண்டே மேலே போய்க் கொண்டு இருப்பாயாக!

பாடல்: 28

வக்ர பந்தா யதபி பவத;
ப்ரஸ்திதஸ் யோத்த ராசாம்
சௌ தோத்ம்க ப்ரணயபிமுகோ
மாஸ்ம பூருஞ்சயின்யா:

*வித்யுத்தாமஸ் புரித சகிதைஸ்தத்ர*
*பௌராட் கநாநாம்*
*லோலா பாட்டு கைர்யதி ந*
*ரமஸே லோநைர் வஞ்சி தோஸி*

*எப்படியும் வடக்குப் பக்கம் நீ புறப்படும் பொழுது வழியெல்லாம் கோணலாக இருக்கும். ஆயினும் வழியில் உஜ்ஜைனியின் மாடங்களின் கூட கோபுரங்ளைக் கண்டு மயங்கி விடாதே. அவைகளைப் பற்றிக் கட்டாயம் பரிச்சயம் கொள்.*

*அங்குள்ள பட்டிணத்தில் பெண்களின் மின்னலில் ரேகா மாதிரியான சஞ்சலமான பார்வையுள்ள கட்டழகைக் கண்டிப்பாய் காண்பாய்! மறந்து விடாமல் அவர்களின் அழகையும் ரசித்திடுவாய்.*

### பாடல் : 29

*வீசிக்ஷோ பஸ்த நித விஹக*
*சிரேணி காஞ்சி குணாய;*
*ஸம்ஸர்பன்த்யா: ஸ்கலித சுபதம்*
*தர் ஷிதா வர்த நாபே:*
*நிர்வந்த்யாயா; பதி பவ*
*ரஸாப்யந்தர: ஸந்நி பத்ய*
*ஸ்த்ரிணா மாத்யம் ப்ரணய வசனம்*
*விப்ர மோ ஹி பிரியேஷு!*

*அலைகளின் சப்தம் போல் பறவைகள் ஆகாயத்தில் வரிசையிட்டுப் போகும் பொழுது உண்டாகும் சப்தத்தினாலும், அலைகளின் கற்களின் மீது மோதுவதில் உண்டாகும் சப்தத்தினாலும், வாலிபத்தின் மதம் கீழே விழுகிறது.*

*அங்கு அழகாக பெருக்கெடுத்து ஓடும் வண்டு ரூபமாக நாபியை வெளிக்குக் காண்பிக்கும் நிர்விந்தியா நதியின் வழியில் போவாய்!*

சிருங்கார ரஸத்தின் சுவையின் பெருமையை அழகாக அறிந்து கொண்டிடுவாய்! ஏனெனில் ஸ்த்ரிகளுக்குத் தங்கள் காதலர்களுடன் சிறு சிறு சேஷ்டைகள் ஏற்பட்டு விடும். இதையும் நீ அறிவாய்.

பாடல் : 30

வேணீ பூத ப்ரதனு ஸலிலா:
தாமத் தஸ்ய சிந்து:
பாண்டுச்சாயா தட்ருஹ தருப்ரம்
சிபிர் ஜீர்ண வர்ணை:
ஸௌபாக்யம் தே சுபக்ர!
விரஹா வஸ்த்யா வ்யஜ் ஜயந்தி
கார்ஷ்யயேன த்யஜதி
விதினாஸ த்வயைவோப பாத்ய:

தலைப் பின்னலைப் போல் ஆகியிருக்கும் க்ஷீண மான ஜலத்தைக் கொண்ட நதியின் மூன்று தாரைகளும் கரையில் பூத்து மலர்ந்து கீழே விழுந்த விருக்ஷங்களின் இலைகளுடன் சேர்ந்து கொள்ளும்.

மஞ்சள் நிறம் கொண்ட அந்த சிந்து நதியைக் கடந்து உன்னுடைய சௌபாக்கியத்தை, விரகதாபத்தின் வேதனையால் பிரகடனம் செய்திடுவாய்.

எவ்விதம் உனது பலஹீனமானது வெளிபடுகிறதோ அதேபோலவே நீயும் போய்தான் ஆக வேண்டும். அதாவது அந்த நீளமான சிந்து நதியினைக் கடந்து போகத்தான் வேண்டும்.

பாடல் : 31

ப்ராப்யா வனதீநுத யனகதா கோவித
க்ராம வ்ருத்தான்:
பூர்வோ த்ருஷ்டா மூ பஸர
புரீம் ஸ்ரீ விஷாலம் விஷாலாம்

ஸ்வல்பீபூதே சுசரித பலே
　　ஸ்வர்கிணாம் காம் கதானாம்!
சேஷை; புண்யைர் ஹ்ருர்தமிவ:
　　திவ: காந்தி மத்கண்ட மேகம் ||

ராஜா உதயனன் கதையினால் பிரசித்த பெற்ற கிராமமான விருத்த ஜனங்களைக் கொண்ட அவந்தி பிரதேசம் செல்வாய்!

முதலில் கூறியபடி சம்பந்தக்களினால் விசாவ விசாலமான உஜ்ஜையினி என்ற பெயர் கொண்ட நகரத்திற்குப் போவாய்!

அது எப்படியிருக்கும் என்றால் புண்ணிய கர்மா பலன் கம்மியாகி விட்டதனால் மிகுதி பாக்கியிருக்கும் புண்யங்களைக் கொண்ட ஸ்வர்கத்தின் ஒரு சிறு துண்டு பாக்கியிருப்பது போல் காணப்படும்.

பாடல் : 32

தீர்கீ குர் வன் படு மதகலம்
　　கூஜிதம் ஸாரஸாநாம்
ப்ரத்யூ ஷே ஷு ஸ்புடித கமலா
　　மோத மைத்ரீ கஷாய||
யத்ர ஸ்திரீணாம் ஹரதி
　　சுரத க் லாநிமஸ் கானுகூல:
சிப்ரா வாத: பிரியதம இவ
　　பிரார்தனா சாடு கார:

அங்கு விஷாவாவில் ப்ராத காலம் கொக்குகளைக் கொண்ட மதுரமான சப்தங்களைப் பெருக்கிக் கொண்டே மலர்ந்து விரிந்து, கமல புஷ்பங்களின் சுகந்தத்தினால் இளைக்கப் பட்டு, ஷப்ரா நதியின் சுகத்தில் ஈடுபட்டு அங்கு வீசும் காற்றினால் ரதி கிரீடாவில் மகிழ்ந்த ஸ்திரிகளின்

களைப்பை தூர விலகச் செய்து விட்டு அங்கிருந்து புறப்படுவாயாக!

பாடல் : 33

ஹாராம் ஸ்தாராம் ஸ்தல குடிகான்
கோடிச: சங்கசுக்தீ:
சஷ்பஷ்யா மான் மரகத மணீனுன்ம
யூக ப் ரோஹான்
த்குஷ்ட்வா யஸ்ஸாம் விபணி ரசிதா
விந்த்ரு மாணாம் ச பங்கான்
ஸம் லக்ஷயன்தே ஸலில நிதயஸ்தோய
மாத்ரா வ ஷேஷ:

கோடிக்கணக்கான ரூபத்தில் கடைகளில் இறைந்து கிடக்கும் சுத்தமான விலைமதிக்க முடியாத மாலைகளையும், சங்குகளையும், சிப்பிகளையும் காணலாம்.

புற்களைப் போல் பச்சை நிறமுள்ள கிரணங்களின் ஒளியினால் பிரகாசிக்கும் மரகத மணியும், பவழங்களும் சிதறிக் கிடக்கும் பாகங்களையும் காணலாம்.

இவற்றை எல்லாம் பார்த்துக் கொண்டே போனால் சமுத்திர ஜலம் உனக்குத் தென்படும்.

பாடல் : 34

ப்ரத்யோதஸ்ய பிரியதுஹி தரம்
வத்ஸ ராஜோத்ர ஜஹ்ரே!
ஹைமம் தால த்ரும வன மபூதத்ர
தஸ்யைவ ராக்ஞ: |
அத்ரோத் ப்ராந்த, கிலநலகிரி
ஸ்தம்ப முத்பாயதர்பா—
தித்யா கன்தூன் ரம்யதி ஜ்னோ
யத்ர பந்தூந பிக்ஞ : ||

அங்கு வத்ஸதேசத்தின் ராஜா உதயணன், ப்ரத யோத் தாவின் ராஜாவின் பிரியமான புத்திரி வாஸவதத்தாவை அபஹரணம் செய்து கொண்டு போனான்.

அங்கு அதே ராஜா ப்ரத்யோத்தாவின் சுவர்ண மய மான விருஷங்களின் வனம் இருந்தது. அங்கு தான் நவகிரி என்னும் யானை மதம் பிடித்து கம்பங்களையெல்லாம் பிடுங்கி இங்கும் அங்கும் வீசிவிட்டுத் திரிந்து வந்தது.

இம்மாதிரியான பழைய கதைகளைத் தெரிந்து கொண்டு அங்குள்ள ஜனங்கள், வருவோர் போவோரிடம் இந்தக் கதைகளைச் சொல்லி ஆனந்தப்படுவார்கள்.

பாடல் : 35

பத்ர ஸ்யாமா திசைர ஹயஸ்பர்திநோ
யத்ர வாஹா:
ஷை லோத கராஸ்த்வ மிவ கரிணோ
விருஷ்டி மந்த: பிரபே தாத்
யோதா க்ரண்ய: ப்ரதித முகம்
ஸம்யுகே தஸ்தி வாம்ஸ:
ப்ரத்யாதிஷ்டா பரணருச யஷ்ச்
சந்த்ரஹாஸ வ்ரணாங்கசை

அங்கு விஷாவாவில் குதிரைகள் இலைகளைப் போல் பச்சை வர்ணமாக வளமாக இருக்கும். சூரியனுடைய குதிரைகளுடன் போட்டியிடும்.

அங்கு யானைகள் மலை போல் பெரியதாக இருக்கும். அவைகள் மதம் பொழிவதால் நீ மழைமொழிவது போல் இருக்கும்.

சிரேஷ்டமான போர்வீரர்கள் இராவணன் மாதிரி நின்று கொண்டு இருப்பர். அவர்களுடைய உடம்பில் ஏற்பட்ட காயங்கள் இராவணனுடைய வாளினால் ஏற்பட்டதால்

அவைகளைப் பார்ப்பதற்கு சந்திரஹாஸ மாலைகளைத் துறந்து இருப்பது போல் இருக்கும்.

பாடல்: 36

ஜாலோத் கீர்ணே ருப சித வபு:
கேச ஸம்ஸ் கார தூபை:
ர்பந்து ப்ரீத்யா பவன சிகிபிர்தத்த
ந்ருத்யோப ஹார।
ஹர்ம்யே வஸ்தா: குஸுமசுரபிஷ்வ
த்வகேதம் நயேதா
லக்ஷ்மீம் பஷ்யல்லலித வநிதா பாதரா
காலம் கிேஷு॥

ஸ்திரீகளின் கேசத்தின் நடுவிலிருந்து கிளம்பும் புகைகளின் சுகந்தத்தினால் புஷ்டியான சரீரம் அடைந்து ப்ராத்ரு சிநேகத்தின் காரணமாக பவனங்களில் நடனமாடும் மயில்களின் அழகை நீ உபசாரமாகப் பெற்றிடுவாய்!

பூவினால் மணம் வீசும் சுந்தர ஸ்த்ரீகளின் பாதங்களில் வர்ணமிட்டு இருக்கும் அழகிய ரஸத்தின் அழகையும் கண்டு மேகங்களின் இந்த அழகை விஷாலாவில் பார்த்தாலே போதும் உன்னுடைய களைப்பு தீர்ந்து போகும்.

பாடல்: 37

பர்து: கண்டச் ச விரிதி கணை:
ஸாதரம் வீக்ஷ்யமாண
புண்யம் யாயஸ்திர புவன குரோர்தாம
சண்டீஷ்வரஸ்ய।
த்ருதோ த்யானம் குவலய ரஜோ கான்திபிர்
கந்த வத்யா:
ஸ்தோய க்ரீடா நிரததி ஸ்நாநதி
வனதர்மயூ வருத்பி:

ஹே மேகமே! ஸ்வாமி சம்புவின் கழுத்தைப் போல் அழகு தரும் கணங்களை நினைவில் கொண்டு மூன்று உலகிற்கு குருவான சங்கரரின் பவித்ர தாமம் போய்ச் சேர்ந்திடுவாய்!

அந்த இடம் எப்படி இருக்கும் என்றால் கமல பராகத்தினால், சுகந்தம் உள்ளதாக இருக்கும்.

அத்துடன் சந்தனம் முதலிய வாசனைத் திரவியங்களைக் கொண்டு ஸ்நானம் செய்யும் ஸ்திரிகளின் சுகந்தத்துடன் கூடிய கந்தவதி நதிக்கு மேல்புறம் காற்றினால் அசைந்தாடும் பூந்தோட்டங்களைக் கொண்டதாகவும் விளங்கும்.

பாடல் : 38

அப்யன்யஸ்மிஞ்ச லதர
மஹாகால மாஸாத்ய காலே
ஸ்தாதவ்யம் தே நயன விஷயம்
யாவதத்யேதிம் பானு : ।
குர்வன் ஸன்த்யா பலிபடஹதாம்
ஷீலின ஷ்வாகனீயா
மாமன்த்ரணாம் பல மவிகலம்
லப்ஸ்யஸே கர்ஜிதானாம் ॥

ஹே மேகமே! மகாகாலத்தின் சமீபமாகச் செல்வாயாக எல்லாக் காலங்களிலும் சூரியனின் கண்களிலிருந்து மறையும்வரை அங்கேயே இரு.

அங்கு சாயங்காலத்தில் சங்கரரின் நகாடே என்ற வாத்யத்தை வாசித்துவிட்டு பின்னால், கொஞ்சம் கம்பீரமாக கர்ஜனையும் செய்துவிட்டு முற்றிலும் முழுமையான பலனைப் பெறுவாயாக!

பாடல்: 39

*பாதன்யாஸை க்வணிதரஷநா ஸ்தத்ர*
*லீலா வதூதை:*
*ரத்னச் சாயாகசிதவலி பிஷ்சாமரை:*
*க்லாந்த ஹஸ்தா:*
*வேஷ்யாஸ்த் வத்தோ நகபத முகான்*
*ப்ராப்ய வர்ஷாக்ரபிந்தூ*
*நாமோ ஷ்யந்தே த்வயி*
*மதுகர ஷ்ரேணி தீர்கான் கடாக்ஷான்*

அங்கு பாதங்களின் அசைவினால் சப்தமிடும் பாதச் சிலம்பு ஒலியும், விலாசத்தினால் மெய்ம்மறந்து இருக்கும் ரத்னங்களின் காந்தியால் விபூஷிதமாகும்.

களைப்படைந்து இருக்கும் வேசிகள், நகங்களினால் காயமடைந்த அவர்கள் உடலுக்கு சுகமளிக்கும் (வர்ஷாவின்) மழையின் முதல் துளிகளை நீ கொடுத்திடுவாய்!

அவர்கள் அதுசமயம் வண்டுகளின் கூட்டங்களைப் போல் உன்மீது தங்களது நீள் விழிகளுடன் நோக்குவர்.

பாடல்: 40

*பஷ்சாது ச்னசர் புஜ தருவனம்*
*மண்டலே நாபிலீன:*
*சாந்த்யதேஜ: ப்ரதிநவஜ பாஷ்புஷ்ப*
*ரக்தம் ததான: |*
*ந்ருத்யாரம்பே ஹர பசுபதேரார்த்ர*
*நாகா ஜினே ச்சாம் |*
*சாந்தோ த்வே கஸ்திமித நயனம்*
*த்ருஷ்ட பக்திர் பவான்யா !|*

பின்னால் சிவனின் தாண்டவ நிருத்தியத்தின் ஆரம்பத்தில் புதிதாக மலர்ந்த ஜபாபுஷ்பம் போல், ரஜ்த வர்ணம்

கொண்டு சாயங்கால காந்தியை கிரகித்துக்கொண்டு உயரச் செல்வாய்!

சிவனாரின் பூஜாரூபி விருக்ஷங்களைக் கொண்ட மலை மீது பரவலாகி இருப்பாய்!

பார்வதி தேவி மூலமாக பயத்தை விட்டு விட்டு நிஷ்சல திருஷ்டியினால் பக்தி கொண்டு நீ சிவனுடைய ஈரமான கஜசர்மத்தை விலக்கி நீயே ஈரமாக்கியதுபோல் அவனுடைய வஸ்திரத்தையும் நனைத்து விடுவாய்!

பாடல் : 41

கச்சந்தீனாம் ரமண வஸதி
யோ ஷிதாம் தத்ரநக்தம்
ருத்தா லோகே நரபதி பதே
சூசி பேத்யை ஸ்த மோபி:
சௌதா மன்யா கனகனி கஷ
ஸ்நிக்தயா தர்ஷயோர்வீ
தோயோ த்ஸர் கஸ்தநித முகரோ
மாச பூர் விக்ல வாஸ்தா : ||

அங்கு விஷாவாவில் இரவில் பிரேமிகளின் வீடுகளுக்குப் போகும் ஸ்திரிகளுக்குப் பயங்கரமான இருட்டை உண்டாக்குவாய்!

அந்த இருளின் காரணமாக ராஜவீதிக்கு வழிதெரியமாலிருந்தால், வெள்ளை வெற்றிலையில் காணப்படும் மெல்லிய ஸ்வர்ண ரேகா கோடுகள் போல் நீ வழிகளை உண்டாக்கி அவர்களுக்கு போக வழி காட்டு. அதற்காக இடியுடன் கூடிய மழையைப் பொழியாதே! அவர்கள் பயப் படுவார்கள்.

## பாடல் : 42

தாம் கஸ்யாஞ்சித் பவன வலபௌ
　　சுப்த பாரா வதா யாம்!
நீத்வா ராத்ரிம் சிரவிலஸநா கின்ன
　　வித்யுத் கலத்ர:
த்ருஷ்டே சூர்யே புனரபி
　　பவான் வாஹயேதத் வஷேஷம்
மந்தாயன்தே ந கலு ஸீஹ்ரு
　　தாமப்யு பேதார்த க்ருத்யா :॥

வெகு நேரம் மின்னியதால் களைப்படைந்த மின்னல்கள் என்னும் ஸ்திரீ ரூபிகள் தூங்கிக் கொண்டு இருக்கும்; புறாக்களைக் கொண்ட அரண்மனைகளின் அட்டத்தின் மீது இரவு கழிந்து விட்டு காலை சூரியன் உதயமானதும் நீ வழிவகுத்துக் கொண்டு மேலும் புறப்படுவாயாக.

அவ்வாறு நீ மேலே போகும் வழியை உனக்குள் நிர்ணயம் செய்து கொள்வாய்! ஏனெனில் நண்பர்களின் உதவி நாடும் ஒருவர் அவர்கள் உதவி செய்யும் பொழுது காரியத்தைத் தளர விடக்கூடாது.

## பாடல் : 43

தஸ்மின் காலே நயனஸலிலம் யோ ஷிதாம்
　　கண்டி தாநாம்
சாந்தி நேயம் ப்ரணயி பிரதோ
　　வர்த்ம பானோஸ்த்ய ஜாஷு
ப்ராலேயா ஸீத்ர கமல வதனாத்ஸோபி
　　ஹர்தும் நலின்யா:
ப்ரத்யாவருத்தஸ்த்வயி கரருதி
　　ஸ்யாதநல்பாப்க்தேஸுய: ॥

அந்த சூரியோத காலத்தில் ப்ரேமிகளான நாயகிகளின் கண்ணீரைத் துடைக்க வேண்டி வரும். ஆகவே

நீ சூரியன்பின்னால் போகாதே! சீக்கிரம் அதை விட்டு விடு!

ஏனெனில் கமலினியின் கமலரூபி முகத்தின் பனித்துளி களைத் துடைப்பதற்காக வேண்டி, சூரியன் திரும்ப வருவான். அது சமயம் நீ கிரணரூபியின் கைகளை நிறுத்து வதால் அது அத்யதிகமான கோபம் அடையக் கூடும். அதாவது உன்னால் அந்த பனித்துளிகள் துடைக்கப்பட்டு விடும். அதனால் சூரியன் கோபம் அடையக்கூடும்.

பதி ஏதேனும் ஒரு அன்னிய ரமணீயின் மீது மோகம் கொண்டு அவளிடம் ராத்திரியை கழித்து விடுவான். விடியற் காலை சம்போக சின்னங்களுடன் அவளிடமிருந்து வரும் ஒருவனை கண்டிதா நாயிகா என்பார்கள்.

பாடல் : 44

கம்பீரயொ: பயஸி ஸரிதஷ் சேதஸீவ
    ப்ரஸன்னே!
சாயாத்மாபி ப்ரக்ருதி சுபகோ
    லப்ஸ்யதே தே ப்ரவேஷம் |
தஸ்ய மாதஸ்யா: குமுத விஷதான்யஹம்ஸி
    த்வம் ந தைர்யா:
ந் மோகீ கர்தும்ச படுலர்ஷம்
    பரோத்வர்த்தநநி ப்ரேஷிதானி!

கம்பீராநதியின் பிரசன்ன சித்தம் போல் ஜலத்தில் தன்மையான உன்னுடைய சுந்தரமான சரீரத்தின் நிழல் தெரியும்.

இதனால் நீ குமுதமலர் போன்ற வெள்ளை மலர்களி னாலும், சஞ்சலமான மீன்களின் துள்ளுதலினாலும் அவைகளை நீ தைரியமில்லாமல் செய்து விடாதே! மேலும் புறப்படுவாய்!

பாடல் : 45

*தஸ்யா: கிஞ்சித் கரத்ருதமிவ*
*ப்ராப்த வானீரஷாகம்*
*ஹ்ருத்வா நீலம் ஸலில வஸனம்*
*முக்த ரோதோ நிதம்பம்*
*ப்ரஸ்தானம் தே கதமபி ஸகே*
*லம்பமானஸ்ய பாவி*
*க்ஞாதாஸ் வாதோ விவ்த்ஜகநாம் கோ*
*விஹாதும் ஸமர்த்த:*

மூங்கில் குச்சி நுனிகளாலான கிளையைக் கைகளால் தொடப்படும் கனரூபமான அந்த (நிதம்பத்தை) நிதம்பங்களை நழுவ விடட்டும்.

அந்த கம்பீரா நதி தனது நீலநிற வஸ்திரத்தைத் தள்ளி விட்டுப் போகும் போதும் நீ அவைகளை விட்டு போவது உனக்கு ரொம்பவும் கஷ்டமாக இருக்கும்.

எந்த ஒரு புருஷன் அழகான தொடைகளையுடைய காமினியை விட்டுப் பிரிய சமர்த்தனாக இருப்பான்?

பாடல் : 46

*த்வந்நிஷ் யந் தோச்சவஸித*
*வசுதா கந்த ஸம்பர்கரம்ய:*
*ஸத்ரோ தோ ரந்த்ரத்வ நித சுபகம்*
*தந்திபி: பீயமான:*
*நீ சைர்வாஸீய யுப ஜிகமிஷோ*
*ர் தேவ பூர்வம் கிரிம் தே!!*
*ஹீதோ வாயு பரிணமயிதா*
*கான னோ தும்ப ராணாம் ||*

நீ மழை பொழிவதால் மிதந்து கிடக்கும் பிருத்வியின் சுகந்தத்தின் சம்வர்தத்தின் ரமணீயமான யானைகள்

தங்கள் துதிக்கையினால் சுந்தர ரூபத்துடன் குடிக்கும் தண்ணீரை கொண்டும், கானகத்து புஷ்பங்களை மலரச் செய்து வரும் சீதளமான குளிர்ந்த காற்றும், தேவகிரி போக நினைக்கும் உன் கீழே பெருகி ஓடும்.

தேவகிரி என்பது தற்சமயத்து தேவகட்—சம்பல்நதியின் தக்ஷிண மஸ்வாவின் கேந்திரத்தில் இருக்கிறது.

பாடல் : 47

தத்ரம் ஸகந்தம் நியதவஸதிம்
புஷ்ப மேகீ க்ருதாத்மா ।
புஷ்பா ஸாரை: ஸ்நபயது
பவான்: யோம கங்கா: ஜாலார்த்ரை:
க்ஷோ ஹேதோ ர்நவ ஷஷிப்ருதா
வாஸவீனாம் சமூனா
மத்யாநித்யம் ஹீத வஹீமுகே
ஸம்ப்ருதம் தத்தி தேஜ: ॥

தன்னைத்தானே புஷ்பங்களினாலான மேகமாக செய்து கொண்டு நீ ஆகாச கங்கையின் ஜலத்தினால் ஈரமான புஷ்பங்களை பரவலாகப் பொழிந்துவிடு.

அங்கு தேவகிரியில் ஸ்தாயிருபமாக நிவாஸம் செய்யும் கார்த்திகேயனை ஸ்நாநம் செய்து வை!

ஏனெனில் இந்திரனின் சேனைகளின் ரக்ஷைக்காக வேண்டி புதிய சந்திரனைக் கொண்டிருக்கும் சங்கரர் மூலம் அக்னியின் முகத்தில் ஈடுபட்டு இருக்கும் சூரியனையும் அதிக்ரமணம் செய்யும் சக்தி இதில் இருக்கிறது.

பாடல் : 48

ஜயோதிர் லேகா வலயி கலிதம்
யஸ்ஸ பஹம் பவானி
புத்ரப்ரேம்ணா குவலயதள ப்ராபி
கர்ணே க்ரோதி ।

தௌதா பாம்கம் ஹரஷஷிருசா
பாவகேஸ்த மயூரம்
பஷ்சாத த்ரி க்ரஹ ணகுரூபி
ர் கர்ஜித் தைர் நர்தயேதா

எந்த மயிலின் காந்திமய ரேகாக்களைக் கொண்ட மண்டலங்களினால் சூழப்பட்ட இறகுகளை பார்வதி புத்ர ஸ்நேஹமய ரூபத்துடன் கமல மொட்டுக்களை காதுகளில் அணிகின்றாளோ, சங்கரனின் சந்திரமாவின் காந்தியினால் துளைக்கப்பட்டு இருக்கும் க்ஷேத்ர பிரதேசம் கொண்ட அந்த மயூரத்தை பின்னால் பர்வதத்தில் கூப்பாடு இடும் கர்ஜனையின் மூலம் ஆட்டி வைப்பாய்!

பாடல் : 49

ஆராத்யைநம் ஸ்ரவணபவம்
தேவ முல்லகிதாத்வா
சித்த த்வந்த் வைர் ஜலகண
பயாத்வணி பிமுக்தமார்க:
வ்யாலம் பேதா: சுரபிதனயா லம்பஜாம்
மானயிஷ்ய
ன்ஸத்ரோ தோ மூர்த்யா புவிபரிணதாம்
ரந்தி தேலஸ்ய கீர்திம் ।

இந்த சரகண்டவனத்தில் உண்டான தேவன் கார்தி கேயனுக்கு ஆராதனை செய்திடுவாய்.

வீணாதாரி சித்த தம்பதிகளின் ஜலகணங்கள் கீழே விழும் பயத்தினால் வழியை விட்ட நீ ஏதோ ஒருவித மார்கம் நிச்சயம் செய்து கொள்வாய். கிலாலம்ப யக்ஞத் தினால் உற்பத்தியான நீ மேலும் உலகில் நதி ரூபத்தில் பரிவர்த்தனமான ராஜா நந்தி தேவனுக்கும் அவனுடைய கீர்த்திக்கும் மரியாதை செய்து கொண்டே கீழே இறங்கி கொஞ்சம் நிற்பாயாக!

ராஜா நந்திதேவன் தசபுரத்தின் ராஜாவாக இருந்தான் அவன் சந்திரவம்ச ராஜா பரதனின் வழிவந்தவன். அவன் ஆறாவது தலைமுறை. அவன் மிகவும் உதார குணமுள்ள வனாகவும், யக்ஞசீலனாகவும் இருந்தான்.

பாடல் : 50

த்வய்யா தாதும் ஜலமவனதே
சார்ங்கிணோ வர்ணசௌரே
தஸ்யா: சிந்தோ: ப்ருது மபி
தனும் தூரபா வாத்ப்ர வாஹம்!
ப்ரேக்ஷிஷ்யந்தே ககன கதயோ
நூந மா வர்ஜ்ய த்ருஷ்டி
ரேகம் முக்தாருணமிவ புவ:
ஸ்தூல மத்யே ந்திர நீலம்

ஸ்ரீகிருஷ்ண வர்ணத்தின் காந்தியை எடுக்க நினைக்கும் தேவகணங்கள் உன்னுடைய ஜலத்தை எடுக்க வேண்டி குனிவர்.

அந்த கணத்தவர்கள் பெரியவர்களாக இருந்தும் வெகு தூரம் இருப்பதால் க்ஷீணமாகத் தோன்றும் சர்மண்வதி நதியின் பிரவாஹத்தை நிச்சயம் இம்மாதிரி பார்ப்பார்கள்.

ஒரே ஒரு வடத்தின் நுனியில் இருக்கும் ஹாரத்தின் நடுவில் பெரியதொரு நீலமணி கோர்த்திருக்கிறதோ என்று அவர்கள் நினைப்பார்.

பாடல் : 51

தாமுத்தீர்ய வ்ரஜ பரிசிதப்ரூலதா
விப்ரமாணாம்!
பக்ஷ்மோத் க்ஷே பாதுபரி விலஸத்கிருஷ்ண
ஸார ப்ரமாணாம்

குந்தக்ஷே பானுக மதுக
ஸ்ரீமுஷாமாத்ம பிம்பம்
பாத்ரீ குர்வந்தஷ புர வதூநேத்ர
கௌதூ ஹ லா நாம் ।

அந்த சர்மண்வதியைக் கடந்து தன் சுயரூபத்துடன் புருவம் என்னும் லதாவின் விலாசத்தை அறிமுகம் செய்து கொண்டு கண் இமைகளைத் திறந்திடுவாய்.

அவ்வாறு திறக்கும் போது வெளியே தென்படும் சோலை நிறைந்த சியாம, சுவேத சிகப்பு நிறங்களுடன் கூடிய குந்த புஷ்பங்கள் இங்கும் அங்கும் ஆடும். அதனால், அதன் கூடவே ஆடிவரும் வண்டுகளின் அழகை கொள்ளையிடும் தஷபுருவின் லலனாக்களின் கண்களுக்கு இதம் அளித்துக் கொண்டும் குதூகலத்தைக் கொடுத்துக் கொண்டும் மேலே செல்வாயாக!

பாடல்: 52

பிரு மாவர்த்த ஜனபத மதச்சாய்யா
காஹமாந:
க்ஷேத்ரம் க்ஷத்ரப்ரதன பிஷுனம்
கௌரவம் தத்பஜேதா:
ராஜன்யானாம் சிதசர ஷனதர்யத்ர
கான்டீவதன்வா
தாராபாரை ஸ்த்வ மிவ கமலான்யப்ய
வர்ஷன் முகானி ।

பிரஹ்மாவர்த்ததம் எனும் நாமம் கொண்ட ஜன பதத்தில் சூழ்ந்திருக்கும் இடத்தில் பிரவேசித்திடுவாய்.

க்ஷத்ரியர்களின் யுத்தத்தின் சூசகமான பிரசித்தி பெற்ற தலம் குருக்ஷேத்திரம்.

அந்த இடத்தில் தான் அர்ஜுனனின் நூற்றுக்கணக்கான அம்புகள் வீரர்களின் மீது மழையெனப் பொழிந்தன.

அது எப்படி ராஜாக்களின் முகங்களைத் துளைத் தனவோ அதே போல் நீ கமல புஷ்பங்களின் மீது வர்ஷா வைப் பெருக்கி துளிர்க்கச் செய்திடுவாய்.

கௌரவ க்ஷேத்ரம் என்பது குருக்ஷேத்ரமாகும்.

பாடல் : 53

ஹித்வா ஹாலாபிமத ரஸாம்
ரேவதி லோச நாங்காம்
பந்து ப்ரீத்யா ஸமரவி முகோ
லாங்லீயா: சிஷேவ।
க்ருத்வா தாஸாமதிகம மபாம்
ஸௌம்ய ஸாரஸ் வதீனா
மந்த: சுத்ரஸ்த்வ மபி
பவிதா வர்ண மாத்ரேண க்ருஷ்ண:

ஹே ஸௌம்ய! பந்துக்களிடம் அதிக அன்பைக் கொண்டதன் காரணமாக யுத்தத்திலிருந்து விலகிய பலராமன் அதிகமான இன்பமளிக்கும் ரேவதியின் கண்களுக் குப் பிரதிபிம்பமாக இருக்கும் மதுராவை விட்டுவிட்டு -எந்த ஜலத்தை பருகினானோ அதே ஸரஸ்வதி நதியின் அந்த தண்ணீரைப் பருகி, உள்ளுக்குள்ளேயே சுத்தமான நீ கேவலம் வர்ணத்தில் மட்டும் கருப்பாகவே இருக்கிறாய்!

பாடல் : 54

தஸ்மாத் சுக்சேரனு கனகலம்
ஷைல ராஜா வத்ர்ணாம்!
ஜஹ்னோ: கன்யாம் ஸஹரதயை ஸ்வர்கஸோ
பான பங்க்தம்।
கௌரி வக்த்ர ப்ருகுடி ரசனாம், யா
விஹ்ஸ் யே வ பேனை
சம்போ: கேஷ க்ரு ஹ ஸமகரோ
தின்து லக்னோர்மி ஹஸ்தா

அங்கிருந்து கனகவத்தின் அருகே உள்ளே ஹிமாலயத்திலிருந்து இறங்கி இருக்கும் சுக்ரபுத்திரர்களுக்காக சுவர்கத்திற்குப் படிகள் செய்து நிற்கும் கங்கையின் அருகில் செல்வாயாக!

கங்கையானவள் தனது நுரைகளினால் பார்வதியின் புருவங்களின் அழகை உபமானமாகக் கொண்டு அதை உபஹாஸமாகக் கொள்கிறாள்.

சந்திரனைக் கூடத் தொட இருக்கும் அலைகளைக் கொண்ட உன் பெரும் கைகள் பகவான் சங்கரரின் கேசங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

அதாவது பார்வதியின் அழகை விட்டுவிட்டு உன் மேக அலைகள் சங்கரரின் கேசங்களைப் பிடித்துக் கொண்டிருக்கிறது.

பாடல் : 55

தஸ்யா: பாதும் சுரகஜ இவ
வியோம்னி பச்சார்தலம் பி
த்வம் சேதச்சஸ் படிக விஷதம்
தர்கயே ஸ்திர்யா கம்ப:
ஸம்ஸர் பந்த்யா ஸபதி பவத;
ஸ்த்ரோ தஸி ச்சாயயாஸௌ
ஸயாதஸ்தானோ பகத யமுனா
ஸங்க மேவா பிராமா

தேவகஜம் ஐராவதம் போல் ஆகாயத்தின் பின்னால் அரை பாகம் குனிந்து இருக்கும். நீ, ஒரு வேளை கங்கையின் ஸ்படிகம் போன்ற நிர்மலமான ஜலத்தை குடிக்க நினைத்தாயானால் அந்த கங்கை உடனே நிழலில் போய் கொண்டிருக்கும் உன் நிழலில் அன்யந்தர பிரயோகத்தில் யமுனையுடன் சங்கமம் செய்து கொண்டு புதிய பொலிவுடன் விளங்கும்!

பாடல் : 56

ஆஸீனானாம் சுரபித ஷிலம்
நாபி கன்னத மருகாணா
தஸ்யா ஏவ ப்ரபவ மசலம்
ப்ராப்ய கௌரம் து ஷாரை:
வக்ஷ் யஸ்ய த்வச்ரம விநயனே தஸ்ய
ச்ருங்கே நிஷண்ண: ஷோபாம்
சுப்ர த்ரி நயன வருஷோத்
காதபங்கோ பமேயாம்

கூடியிருக்கும் மான் கூட்டங்களினால் உண்டான கஸ்தூரி கந்தத்தினால் சுவாஸ முண்டான சிலாக்களான பாறைகளைக் கொண்டது இமாலயம்.

கங்கையின் பனியினால் மூடப்பட்ட வெண்மையான அந்த இமயமலைக்குச் சென்று உனது பிரயாண அலுப்பை நீக்கிக் கொள்ள நினைக்கும் நீ சிவனாருடைய வாகனமான வெண்மையான நந்தியினால் கிளறப்பட்ட வெண்மைக் கலவையைப் போன்ற அழகினைப் பெற்றிடுவாய்.

பாடல் : 57

தம் சேத்வாயௌ ஸரதி
ஸரலஸ்கந்த ஸங்கட்டஜ சன்மா
பாதே தோல் சாக்ஷ பித சமரி
பால பாரோ தவாக்னி : ।
அர்ஹஸ் யேனம் ஷமயிது மலம்
வாரீ தாரா ஸஹஸ்த்ரை
ராபன் நார்தி ப்ரஷ மனப்லா:
ஸம்பதோ ஹ்முத் தமானா: ॥

வாயுவின் வேகத்தினால் தேவதாரு விருக்ஷங்கள் ஒன்றோடொன்று மோதி தீயை உண்டாக்குகிறது. சமரி பசுக்களின் கேசங்களை எரிக்க வைக்கும் அந்த தணலின் வன்மையால் ஹிமாலயம் துன்பத்தில் மூழ்கும்.

அத்தருணத்தில், ஜலத்தில் நீ ஆயிரக்கணக்கான தாரைகளை உண்டாக்கி, அந்த வெப்பத்தை சாந்தி அடையச் செய்வாய். ஏனெனில் பெரிய மனிதர்களின் செல்வங்கள் துக்கப்பட்டவர்களின் துயரத்தைச் சாந்தி செய்வதற்காக வேண்டி ஏற்பட்டுள்ளதாகும்.

பாடல் : 58

யே ஸம்ரம் போத் பதன ரபஸா:
ஸ்வாங்க பங்காய தஸ்மின்
முக்தாத்வானம் ஸபதி சரபா
லங் கயே யுர் பவன் தம் ।
தானு குர்வீ தாஸ்து முலகர கா விருஷ்டி
பாதா வகீர்ணான்
கே வா நஸ்யு: பரிபவ பதம்
நிஷ்பவர் ரம்ப யத்னா: ॥

அந்த ஹிமாலயத்தின் குரோத பூர்வமான வேகத்துடன் குதித்து ஓடும் சுரப மார்க்கத்தை விட்டு ஓடும் நதிகள் அதனது உடல்களை நாசமாக்கிக் கொள்ளத் திடீரென்று உன் மீது ஆக்ரமிப்பைச் செய்தால் நீ அவைகளின் மீது பயங்கரமான பனிக்கட்டிகளைப் பொழிந்து சிதறடித்து விடுவாயாக!

வியர்த்தமான காரியத்திற்காக வேண்டி யத்னசீலனான ஒருவன் திரஸ்காரம் செய்யக் கூடியவனாக ஏன் ஆகக் கூடாது?

பாடல் : 59

தத்ர வியக்தம் த்ருஷதி
சரண்ன்யா சமர்தேந்து மௌலே:
ஷஷ்வ த்ஸித் தைரூப சித் பலிம்
பக்தி நம்ர: பரீயா: ।

லஸ்மின் த்ருஷ்டே கரணவிசமா தூர்த்வ
ர்முத் தூத பாபா:
கல்பிஷ்யந்தே: ஸ்திரகணபத
ப்ராப்த்யே ஸ்ரத்தானா : ||

அங்கு ஹிமாலயத்தின் பாறைகளில் ஸ்பஷ்டமாகத் தென்படும் சித்தர்களின் மூலம் நிரந்தரமாக உபகாரங்களைப் பரிசாகக் கொடுக்கும் சிவனின் சரண சின்னத்தில் பக்தியினால் தலைகுனிந்து நீ அவரை வலம் வந்து வணங்கு!

எந்த சரண சின்னங்களைக் கண்டால் பாபங்களிலிருந்து விடுபட்ட சிரத்தையுள்ள ஜனங்கள் சரீரத்தை விட்ட பின்பும், சிவகணங்களின் சாச்வத பதத்தைப் ப்ராப்த்மடைய யோக்யர்கள் ஆகிறார்கள்.

பாடல்: 60

சப்தாயந்தே மதுரமனிலை:
கீசகா: பூர்யமாணா:
ஸம்ரக்தா பிஸ்த்ரி புர விஜயோ
கீயதே: கின்னரீபி: |
நிர்ஹ்ரா தந்தே முரஜ இவ
சேத் கன்த ரேஷு த்வனி: ஸ்யாத்
ஸங்கீதார்த்தோ நனுபசுபதேஸ்
தத்ர பாவி ஸமக்ர : ||

அங்கு சிவனாரின் சரண சின்னங்களில் காற்றினால் சூழப்பட்ட மூங்கில்கள் மதுரமான சப்தத்தை உண்டாக்குகிறது.

பிரேமை நிறைந்த கின்னர ஸ்தீரிகள் திரிபுர விஜயத்தினால் சர்தூஷமடைந்து, விஜய கானம் இசைக்கிறார்கள்.

ஒரு வேளை உன்னுடைய சப்தம் சந்தரா குகைகளின் உள்ளே மிருதங்க த்வனி எழுப்புமானால் சிவனாரின் சங்கீத சாமக்க்ரியைகள் கட்டாயம் பூர்ணமாகி விடும்.

புராண கதைகளின் மூலம் மயன் என்னும் அசுரன் ஆகாயம், அந்தரிக்ஷம், பிருத்வி எல்லா இடத்திலிருந்தும் தங்கம், வெள்ளி இரும்பினாலான மூன்று நகரங்கள் உண்டாக்கினான்.

தேவதைகளின் இச்சைப்படி பகவான் மகாதேவர் இந்த மூன்று புரங்களையும் த்வம்ஸம் செய்தார். ஆகவே அவருக்கு திருபுராரி, திருபுராந்தகன் என்னும் திருநாமங்கள் உண்டானது.

பாடல் : 61

ப்ரா வேயா த்ரே ரு பத்டமதிக்ரம்ய:
தாம்ஸ தான்வி ஷேஷான்
ஹம்ஸத்வாரம் ப்ருகு பதி யஷோ வர்த்ம
யத் க் ரௌ ஞ்ச ரன்த்ரம்।
தே னோ தீசிம் திஷமனு ஸரேஸ்திர்ய
காயா ம ஷோபி:
ஸ்யாமா: பாதோ பவிநியம நாப்யு
த யுத்தஸ் யேவ விஷ்ணோ : ॥

ஹிமாலயத்தின் அடிவாரத்திலுள்ள விசேஷமான வஸ்துக்களைத் தாண்டி பரசுராமனுடைய கீர்த்தியான மார்க்கத்தையும் ஹம்ஸ பக்ஷிகள் மூலம் இருக்கும் க்ரௌஞ்ச பர்வதத்தின் பள்ளத்தில் இருக்கிறது.

அங்கிருந்து போய் நீ பலியை நிக்ரஹம் செய்ய இருந்த விஷ்ணுவின் சியாமள வர்ண கால்களை போல் நீளமாகச் சென்று அழகைக் கொடுத்துக் கொண்டு உத்திர திஷாவின் பக்கம் போவாயாக!

பாடல் : 62

கத்வா சோர்த்வ தஷமுக பு ஜோச்ச
வாஸித ப்ரஸ்த ஸந்தே:
கைலா ஸஸ்ய த்ரிதச வநிதாதர்ப
ணஸ்யா திதி: ஸ்யா : ।
சரு கோச்சாயை குமுத விஷ்தைர்யோ:
விதத்ய ஸ்தித கம்:
ராஷீபூத: ப்ரதி தினமிவ
த்ரயம்பகஸ் யாட்ட ஹாஸ:

மேலே போய் நீ ராவணனுடைய புஜங்களினால் அசைக்கப்பட்ட ஹிமாலய சிகரங்களின் ஜோடிகளையும், கண்ணாடி ரூபமான கைலாஸத்திற்கு அதிதியாகி விடு!

குமுதமலர் போல் வெள்ளையான உயர சிகரங்களில் ஆகாயத்தில் பரவலாக இருந்து பிரதி தினம் சேர்ந்து இருக்கும் சங்கரரின் அட்டஹாஸம் போல் ஸ்திரமாக இருக்கும் அங்குள்ள சிகரங்களின் வெண்மை!

பாடல் : 63

உத்பஷ்யாமி த்வயி தடகதே
ஸ்நிக்த பின்னாஞ்ச நாபே
ஸத்ய: க்ருத்த த்விரத தஷநச்சேந்த
கௌரஸ்ய தஸ்ய ।
ஷோபாபத்ரே: ஸ்திமித
நயநப்ரேக்ஷணியாம் பவித்ரீ
மஸன்யஸ்தே ஸதி ஹலப்ருதோ
மேசகே வாஸ்ஸீவ

நன்றாக அரைக்கப்பட்ட அஞ்சனம் போல் காந்தியான உன்னுடைய கரையை அடைந்திடுவாய்!

புதிதாக வெட்டப்பட்ட யானையின் தந்தம் போல் வெண்மை வர்ணமாக அந்தக் கைலாஸ பர்வதத்தின் அழகை காண்பாய்.

நீலநிற உடைகளைக் கைகளில் வைத்துக் கொண்டது போல் பலராமனைப் போய் நிஷ்சித்நேத்ரங்களினால் பார்க்கவல்ல யோத்யாத்ரியுள்ளவனாக நீ ஆகிவிடுவாய் என்று நான் கற்பனை செய்கிறேன்.

பாடல் : 64

ஹித்வா தஸமின் புஜக வலயம்
சம்புனா தத்தஹஸ்தா
க்ரீடாஷைலே யதி ச விசரேத்
பாத சாரேண கௌரீ ।
பங்கீ பக்த்யா விரசித வபு:
ஸ்தம் பிதான் தர்ஜ லௌக:
ஸோபா நத்வம் குரு
மணித டா ரோஹணா யாக்ராயாயி ॥

அந்த கைலாஸ பர்வதத்தின் மீது சங்கரன் பாம்பின் கங்கணத்தை விட்டுவிட்டுத் தன்னுடைய கரங்களினால் பார்வதியை தாங்கியிருப்பான்.

ஒரு வேளை கால் நடையாக எங்காவது சுற்றினால் நீ உன்னுடைய ஜலப்ரவாஹத்தை சுருக்கிக் கொண்டு முன்னால் போய் கொண்டே இரு. உனது சரீரத்தை சிறி தாக்கிக் கொண்டு மணிகளின் படிக்கட்டுகளில் ஏறுவதற்கு படியாகும் படியான நல்ல பணிகளைச் செய்திடுவாய்.

பாடல் : 65

தத்ரா வஷ்யம் வலய குலிஷோத்
கட்ட நோத்ர்சீர்ண தோயாம்
நேஷ்யந்தி த்வாம் சுரயுவதயோ
யந்த்ர தாராக்ருஹத்வம் ।

தாப்யோ மோக்ஷஸ்தவ யதி: ஸகே
  தர்ம லப்தஸ்ய நஸ்யாத்
க்ரிடா லோலா: ச்ரவண பருஷை
  ர் கர்ஜி தைர்ப்பாய யேஸ்தா: ||

அங்கு கைலாஸ பர்வதத்தின் மீது நிச்சயம் தேவாங் கனைகள் தங்களது கூர்மையான கங்கணங்களினால் தண்ணீரை வாரி இறைக்கும் உன்னை வழிபோகத் தடை செய்வார்கள்.

ஹே மித்ர: அங்கு போய்ச் சேர்ந்த உனக்கு அவர்களிட மிருந்து விடுதலை கிடைக்காவிடில் க்ரிடாவில் சஞ்சலத் துடன் இருக்கும் அவர்களைக் காது கழுத்துக் காதோரமாக இருக்கும் மின்னல் இடிகளுடன் அவர்களைப் பயமுறுத்து வாயாக!

பாடல்: 66

ஹேமாம் போஜ ப்ரஸவி ஸலிலம்
  மரனஸஸ்யாத தான:
குர்வன் காமா: க்ஷணமுக படப்ரீதா
  மைராவதஸ்ய |
துன்வ கல்பத்ரு மகிஸ லயான்யம்சுக்ஷ
  கானீவ வானத
ர்நாநா சேஷ்டைர்ஜலத
  லஸிதைர் விஷேரதம் நகேன்தரம் ||

ஹே மேகமே! தங்க நிறமாக தங்க கமலங்களை உற்பத்தி செய்யும் மானஸரோவரின் ஜலத்தை கிரகணம் செய்து கொண்டு, ஐராவதத்திற்கு ஒரு க்ஷணம் வஸ்த்திரம் போல் ஆனந்தம் அதன் முகத்திற்கு கொடுத்து விட்டு கல்ப விருக்ஷத்தின் மிருதுவான இலைகளின் வஸ்திரங்களைப் போல் காற்றினால் ஆடவிட்டு நாநாவிதமான சேஷ்டை களைக் கொண்ட விலாசங்களினால் அந்த பர்வத

ராஜனுடைய யதேஷ்டமான ஆனந்தத்தை எடுத்துக் கொள்வாயாக!

பாடல் : 67

தஸ்யோத் ஸங்கே ப்ரணியின்இவ
ஸ்த்ரத கங்காதுகூலாம்,
நத்வம் தருஷ்ட்ஹ ந் புரைவகாம்
க்ஞாஸ் யஸே காமசாரின் ।
யாவ: காலே வஹதி ஸலிவோத்கார
முச்னசர் விமான:
மூக்தஜாலக்ர தித மலகம்
காமினீவா ப்ரவிருந்தம் ॥

ஹே! இஷ்டப்படி சுற்றும் மேகமே! அந்த கைலாஸ பர்வதத்தின் மடியிலிருந்து ப்ரேமையினால் கீழே நழுவும் காமினிகளைப் போல்—காங்கா ரூபி வெள்ளை வஸ்த்ரம் பூண்ட அந்த அளகாப்புரியைப் பார்.

உயர்ந்த ஏழு மாடிகளைக் கொண்ட அந்த அளகாவில் வர்ஷா களை மாதிரி அது ஜலத்தை மழையாகப் பொழியும் தண்ணீரைத் தாங்கத் தயாராக இருக்கிறது.

மேக ஸமூகத்தை அது எப்படி ஏற்று கொள்வது என்றால் மணிகளாலான கொத்துக்களால் அழகாக அலங்கரிப்பட்ட கூந்தலைப்போல் இருக்கும் என்று வர்ணிக் கிறார் கவி!

**இத்துடன் பூர்வ மேகம் நிறைவு பெறுகிறது.**
**உத்திரமேகம் ஆரம்பமாகிறது.**

□ □

# உத்திரமேகம்

மேக சங்கேஸத்தில் யக்ஷன் மேகத்தைத் தூது விடுகிறான். உத்திர மேகத்தில் அவன் கூறுவதாவது—

ஹே குணஷாலினி பிரியே! குபேரனின் வீடான ஹிமாலயத்தின் சுகந்தமான காற்று தேவதாரு விருக்ஷத்தின் இலைகளைத் துளைத்துக் கொண்டு வருகிறது.

அதிலிருந்து கிடைக்கும் திரவிய ரஸத்தின் சுகந்தத்தை நான் தக்ஷிணத்தின் ஓரத்தில் இருந்துகொண்டு அனுபவிக்கிறேன். அதனுடைய ஆலிங்கனத்தில் உன்னுடைய அங்கங்களின் ஸ்பரிசத்தை நான் ஸ்பரிசிக்கிறேன்.

நீ தைரியமாக இரு. ஏனெனில் இந்த உலகில் யாருக்குமே சதா சர்வகாலமும் சுகம் கிடைப்பதில்லை. யாருக்குமே எப்போதும் துக்கமும் உண்டாவதில்லை. சுகம், துக்கம் இரண்டும் ரதத்தின் சக்கரம் போல் சுழன்றுக் கொண்டு இருக்கும். துக்கத்திற்குப் பிறகு நமக்கும் சுகம் கிடைக்கும்.

நான்கு மாதத்திற்குப் பிறகு பிரபோதினி ஏகாதசியன்று எப்போது விஷ்ணு பகவான் நித்திரையிலிருந்து எழுந்திருப்பாரோ அப்போது என்னுடைய சாபத்தின் முடிவும் உண்டாகிறது.

நாம் இருவரும் பிரிந்து இருந்த பொழுது விரஹ காலத்தில் எத்தகைய சோகத்தை அனுபவித்தோமோ அவை எல்லாம் போய் மீண்டும் அபிலாஷைகளை நிலவொளி நிறைந்த இரவுகளில் நன்றாக உபயோகம் செய்வோம்.

யக்ஷன் மேலும் கூறுகிறான்:

ஹே மேகமே! தோழமை காரணமாகவோ அல்லது என்னுடைய அவல நிலைகண்டோ என் நிலைமையைப் பூராவும் என் மனைவியான யக்ஷிணியிடம் நீ தூது சென்று கூறுவாயாக.''

இவ்வாறு யக்ஷன் கூறியதை யக்ஷிணியிடம் மேகம் தூதாக சென்று கூறுகிறது.

எப்போது இந்த சமாசாரம் குபேரனின் காதுகளில் விழுகின்றதோ உடனே அவனுடைய கருணையால் இவர்களின் சாபத்திற்கு விமோசனம் ஏற்படுத்தி மீண்டும் இவர்களை ஒன்று சேர்த்து வைக்கின்றான். இதுவே உத்திரமேகத்தின் முக்கியமான கருத்துரையாகும்.

பாடல் : 1

வித்யுத்வந்தம் லலிதவனிதா:
ஸேந்த்ரசாபம் ஸசித்ரா:
ஸம்கீதாய ப்ரஹதமுரஜா
ஸ்நிஹ்தகம் பீரகோஷம் ।
அந்தஸீதோயம் மணிமயபுவஸீ
துங்கமப் ரம்லிஹாக்ரா:
ப்ராஸாதாஸீத்வாம் துலயிதுமலம்
யத்ரதைஸீதைர் விஷேஷை:

இங்கு மேகமும், மேகத்தின் வர்ணனைகளை அழகாபுரி என்ற குபேரனின் நகரத்தையும், அங்குள்ள மக்களின் அழகையும் ஒப்பிடுகின்றார்கள்.

நகரமானது அழகிய சித்தரங்களையும், அழகிய யுவதிகளையும் கொண்டுள்ளதுபோல் மேகமானது, அழகான மின்னல்களைக் கொண்டுள்ளது. மேகமானது அழகான வானவில் போன்ற ஏழு வர்ணங்களைக் கொண்டுள்ளது.

அதுபோல் நகரமானது பலவிதமான அழகிய சித்திர வர்ணங்களைக் கொண்டுள்ளது. மேகமானது எவ்வாறு இடி

மின்னல் முழக்கம் போன்ற சப்தங்களைக் கொண்டுள்ளதோ அதுபோல் நகரமும் சங்கீதம், நாதம், மிருதங்கம் போன்ற வாத்தியங்களைக் கொண்டுள்ளது.

மேகமானது எவ்வாறு நீர்த்திவலைகளைப் பெற்றுள் ளதோ அதுபோல நகரமும் அழகான ரத்தினங்களைப் போன்ற மலர்களைப் பெற்றுள்ளது.

மேகமானது எவ்வாறு உயர்ந்து காணப்படுகின்றதோ அதுபோல் நகரத்தின் மாட மாளிகைகளும், கூடகோபுரங் களும் மேகத்தைத் தொடுகின்றன.

பாடல் : 2

ஹஸ்தே லீலாகமல மலகே
பாலகுந்தானுவித்தம்
நீதா லோத்ர பிரஸவரஜஸா
பாண்டுதாமாநேந ஸ்ரீ
சூடாபாஷே நவகுரபகம்
சாருகர்ணே சிரீஷம்
சீமந்தே ச த்வதுபகமஜம்
யத்ர நீபம் வதூநாம் ||

அழகாபுரியில் உள்ள பெண்கள், விளையாட கைகளில் கமலபுஷ்பங்களைக் கொண்டுள்ளார்கள்.

குந்தமலர்களை தங்களுடைய கேசங்களில் சூடி இருப்பர். லோத்ரா மலர்களினால் முகத்தை தேய்த்து விட்டுக்கொண்டு வெண்மையான சோபையுடன் விளங்குவார்கள்.

மலர்ந்த குரபகம் என்ற மலர்களை கொண்டையிலும் சிரிஷா என்ற மலர்ந்த புஷ்பங்களைக் காதுகளில் சூட்டிக் கொண்டிருப்பார்.

கடம்பா என்ற புஷ்பங்களை முன் நெற்றி வகிட்டினைப் பிரித்துக் கொண்டு சூட்டிக் கொண்டுள்ளார்கள்.

இந்த ஆறு புஷ்பங்களையும் ஆறு ருதுக்கள் — பருவ காலங்களைக் காட்டுகின்றது.

பாடல் : 3

*யஸ்யாம் யக்ஷா: ஸித மணிமயா*
*ந்யேத்ய ஹர்ம்யஸ்தலாநி*
*ஜ்யோதிச்சாயாகுஸும*
*ரசிதான்யுத்தமஸ்திரீஸ ஹாயா: |*
*ஆஸேவந்தே மது ரதிபலம்*
*கல்ப விருக்ஷப்ரஸூதம்*
*த்வத்கம் பீரத்வநிஷு சனகை:*
*புஷ்கரேஷ் வாஹதேஷு ||*

நன்கு ரத்தினங்களாலும், பூக்களினாலும் அலங்கரிக்கப் பட்டு, நக்ஷத்திரங்களினால் ப்ரதிபலிக்கப்படும் அந்த அழகிய மாடல்களில், அழகாபுரி யக்ஷர்கள், யக்ஷிணிகளுடன் கல்பக விருஷத்திலிருந்து எடுக்கப்படும் ''ரதிபலம்'' என்ற மதுவை, மேள தாளங்களுடன் ரசித்து குடித்து ஆனந்திக் கின்றனர்.

பாடல் : 4

*மந்தாகின்யா: சலிலசிசிரை:*
*ஸே வ்யமானா மருத்பி:*
*மந்தாராணாமநு தடருஹாம்*
*சாயயா வாரிதோஷ்ணா: |*
*அந்வேஷ்டவ்யை: கனகஸிக தா*
*முஷ்டிநிக்ஷேப கூடை:*
*ஸம்க்ரீடந்தே மணி பிரமர*
*ப்ரார்திதா யத்ர கன்யா: ||*

அழகாபுரியின் பெண்கள் மந்தாகினி நதியிலிருந்து வரும் குளிர்ந்த காற்றினாலும், வண்டுகள் ரீங்காரமிட்டுக்

கொண்டும், சூரியனின் கதிர்கள் தடை செயயப்பட்ட, மந்தார விருக்ஷத்தின் நிழலில் விவாஹத்திற்காக வேண்டி தேவதைகளினால் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கும் தங்க நிற மணற்பரப்பில் கைகளை முட்டியிட்டு ஒளித்து வைத்து விளையாடிக் கொண்டிருந்தார்கள்.

பாடல்: 5

ஸ்ரீவிபந்தோச் சவஸிதசிதிலம்
யத்ர பிம்பாத ராணாம்
க்ஷெளமம் ராகாதநிப்ருத கரேஷ்
வா க்ஷிபத்சு ப்ரியேஷு।
அர்சிஸ்துங்கா நபிமுகமபி
ப்ராப்யரத்ன ப்ரதீபான்
ஹ்ரீமூ டானாம் பவதி விபல
ப்ரேரணா சூர்ணமுஷ்டி; ॥

அங்கு அழகாபுரியில் சஞ்சல கரங்களைக் கொண்ட பிரேமிகளினால் சீலையின் முடியை அவிழ்த்ததினால் தளர்ந்துபோன பட்டு வஸ்திரத்தை விலக்கியதால் நாண மடைந்தனர் ஸ்த்ரிகள்.

க்ஞான சூன்ய பிம்பழம் போன்ற உதடுகளைக் கொண்ட சுந்தரிகளினால் வீசப்பட்ட சூர்ணங்கள் உன்னத ரத்தினங்கள் இழைத்த தீபத்தையே மறைக்கின்றன. (அவர்கள் தங்கள் முஷ்டிகளில் சூர்ணங்கள் வைத்துக் கொண்டு வீசுகிறார்கள்.)

பாடல்: 6

நேத்ரா நீதா: ஸததகதிநா
யத்விமா நாக்ர பூமி
ராலேக்யானாம் நவஜல கணைர்
தோஷமுத்பாத்ய ஸத்ய: ।

சங்காஸ்ப் ருஷ்டா இவ ஜல முச
ஸ்த்வாத்ருசா ஜால மார்கைர்
தூமோத் காரா நுகிருதிநிபுணா
ஜர் ஜரா நிஷ்பதந்தி ||

உன் போன்ற மேகத்தினால் உண்டான தூக்கிப் போய்க் கொண்டிருக்கும் காற்று அழகாபுரியின் ஏழுமாடி கட்டிடங்களின் மேலே உள்ள ஒளியில் இருக்கும் சித்திரங்களை ஜலத்தின் துளிகளினால் கெடுத்து விட்டு பயமடைந்து-புகைகளை ஏற்கும் சாமர்த்தியமான உன்போன்ற மேகங்கள் சீக்கிரமே க்ஷீணமடைந்து ஜன்னல் வழியாக கீழே விழுகிறது.

பாடல்: 7

யத்ர ஸீத்ரீணர்ம் ப்ரியதம புஜா
லிங்கநோச்ச வாஸிதா நா
மங்கக்லானிம் ஸுரதஜ நிதாம்
தந்து ஜாலா வலம்பா: |
த்வத்சம் ரோதா பகம விசதைச்
சந்த்ர பாதைர் நிசீதே
வ்யாலும் பந்தி ஸ்புடஜல்லவஸ்ய
ந்திநச் சந்த்ர காந்தா: ||

எவ்வாறு சந்திரகாந்த கற்களின் துளிகளிலிருந்து சிறு நூல்களைப் போல ஜலபிந்துக்கள் பிரகாசிக்கின்றனவோ; எந்த விதமான பிரதி பந்தங்கள் இல்லாமல் வருகின்றனவோ அது போல தலைவியும், தலைவனும் அன்யோன்ய மிகுதியால் தழுவிக் கொள்வர்.

அவ்வாறு அவர்கள் தழுவிக் கொள்ளும் போது அன்பு மிகுதியால் இளம் பெண்கள் தங்கள் காதலர்களை நடு இரவில் ஆலிங்கனம் செய்துகொண்டு நிலவில் குளுமையைக் காண்கிறார்கள்.

பாடல் : 8

அக்ஷய்யாந்தர் பவன நிதய:
ப்ரத்யஹம் ரக்த கண்டை
ருத்காயத் பிர்தந பதியச: கின்ன
ரைர்யத்ர ஸார்தம் ।
வைப்ரா ஜாக்யம் விபுதவநிதா
வார முக்யா ஸஹாயா
பத்தாலாபா பகிருபவனம்
காமி நோ நிர்விசந்தி

அழகாபுரியில் உள்ள பவனங்களின் உள்ளே அக்ஷயங் களைக் கொண்ட அப்ஸரா போன்ற அழகுடைய முக்கிய வேசிகள் உள்ளனர்.

அவர்களைச் சேர்த்துக் கொண்டும் அவர்களுடன் பேசிக் கொண்டும் இருக்கும் புருஷர்கள் ப்ரதிதினம் மதுர கானத்துடன் உயர்ந்த குரலில் குபேரனின் கீர்த்திக்கானம் செய்வர்.

கின்னரர்களுடன் வைப்ராஜ் என்னும் வெளி உத்யானத்தில் புருஷர்கள் ஆனந்தம் அனுபவித்துக் கொண்டு இருப்பார்கள்.

பாடல் : 9

கத்யுத்கம் பாதலக பதிதைர்
யத்ர மந்தார புஷ்பை:
பத்ரச் சேதை; கநக கமலை:
கர்ணவிப் ரம் சி பிஷ்ச ।
முக்தாஜாலை: ஸ்தநபரிஸரச்
சிந்ந சூத்ரைச்ச ஹாரைர்
நைஷோ மார்க: ஸவிதுருதயே
சூச்யதே காமிநீ நாம் ॥

அழகாபுரியில் சூரியோதயம் ஆனவுடன் நடக்கும் பொழுது தலை முடியில் இருந்து கீழே விழுந்திருக்கும்

மந்தார புஷ்பங்களையும், காதுகளிலிருந்து ஸ்வர்ண கமலங்களையும், மணிமுத்துக்கள் அறுந்து ஸ்த்ரீகளின் மார்பு பிரதேசங்களில் விழுந்திருப்பதையும் காணலாம்.

அவற்றைக் கண்டதால், நீ உனக்குள் அவர்கள் இரவில் கணவன் மார்களுடன் களித்திருக்கிறார்கள் என்பதனை யூகித்துத் தெரிந்து கொள்வாயாக!

பாடல் : 10

மத்வா தேவம் தனபதிஸகம்
யத்ர ஸாக்ஷாத்வஸந்தம்
ப்ராயச்சாபம் ந வஹதி பயான்
மன்மத: ஷட் பதஜ்யம் |
ஸப்ரூபங்க ப்ரஹித நயனை:
காமிலக்ஷ்யேஷ்வ மோகை
ஸ்தஸ்யாரம்பச்சதுர வனிதா
விப்ரமைரேவ ஸித்த: ||

அங்கு அளகாபுரியில் காமதேவன் குபேரனின் மித்திரன் மகாதேவன் சாக்ஷாத் இங்குதான் இருக்கிறான் என்பதை தெரிந்து கொண்டு நீண்ட கயிறுபோல் வண்டுகள் ரீங்காரம் செய்து வில்லைப்போல் வளைந்து போகின்றன.

இதன் காரியம் காமி புருஷர்களின் லக்ஷியத்தைக் கொண்டு சதுர ஸ்த்ரீகளின் கோணலான புருவங்களைக் கொண்ட கண்களையும் அவர்களுடைய நிலையற்ற காரியங்களையும் கவனிப்பதாக இருக்கும்.

பாடல் : 11

வாஸச்சித்ரம் மது நயனயோர்
விப்ரமாதேஷதக்ஷம்
புஷ்போத்பேதம் ஸஹ கிஸலயைர்
பூஷணானாம் விகல்பான் |

லாக்ஷாராகம் சரணகமலந்யாஸ
யோஹ்யம் ச யஸ்யா—
மேக: ஸூதே ஸகலமபலா
மண்டனம் கல்பவ்ருஷ: ||

அளகாபுரியில் கல்பவிருஷம் ஒன்றே பலவித வர்ண வஸ்திரங்களுக்கும் நேத்ரங்களுக்கும், விலாஸம் கற்றுக் கொடுக்கும் மதுவையும், மலர்ந்த புஷ்பங்களையும், அனேக விதமான பூஷணங்களையும், கமலம் போன்ற சரணங்களில் (பாதங்களில்) போடுவதற்கு சாயமிடும் ரஸத்தையும் அந்நகர பெண்களுக்கு எல்லாவிதமான சிருங்கார சாதனங்களையும் உற்பத்தி செய்கிறது.

பாடல் : 12

தத்ரகாரம் தனபதிக்ருஹானுத்
தரேணாஸ்மதீயம்
தூராலக்ஷ்யம் சுரபதிதனுச்
சாருணாதோரணேந |
யஸ்யோபான்தே க்ருதகதநய:
காந்தயா வர்திதோ மே
ஹஸ்த ப்ராப்யஸ்தபகநமிதோ
பாலமந்தாரவ்ருக்ஷ: ||

"அழகாபுரியில் உள்ள குபேரனின் மாளிகையிலிருந்து வடக்கில் வானவில் போன்று வளைந்து அழகான நுழை வாயிலைக் கொண்டுள்ளது.

அதன் ஓரப்பகுதிகளில் மந்தார விருக்ஷமானது அமைந்துள்ளது.

அதன் அருகில் ஸ்வீகாரம் செய்யப்பட்டு வளர்ந்துவரும் அழகிய கைகளினால் தொடக்கூடிய கொத்து கொத்தான பூக்கள் தெரியும்.

அங்கே என் காதலியின் முகம் தெரியும்." இவ்வாறு யக்ஷன் கூறுகிறான்.

### பாடல்: 13

வாபி சாஸ்மிந் மரகதஷிலாபத்
தாஸோபாந மார்கா
ஹைமைச்சன்னா விகசமலை:
ஸ்நிக்தவைடூர்ய நாலை: |
யஸ்யாஸ்தோயே க்ருத வஸதயோ
மானஸம் ஸம்னிக்ருஷ்டம்
நாத்யாஸ்யந்தி வ்யபகதசுசஸ்த்வாமபி
ப்ரேக்ஷ்ய ஹம்ஸா: ||

அங்கு என் வீடு மரகதமணியினால் இழைக்கப்பட்ட படிக்கட்டுகளைக் கொண்டுள்ளது.

வழுவழுப்பான வைடூரிய மணிகளைக் கொண்ட தளங்கள் இருக்கும். தாமரைகளினால் மூடப்பட்ட ஒரு சிறு குளமும் உண்டு.

அந்த ஜலத்தில் வாசம் செய்யும் ஹம்சங்கள் கூட உன்னைக் கண்டால் சந்தோஷப்பட்டு அருகில் இருக்கும் மானஸரோவர் ஏரியையும் வரும்போது போகவும் நினைக்காது.

### பாடல்: 14

தஸ்யாஸ்தீரே ரசிதசிகர:
பேசலை இந்த்ர நீலை:
க்ரீடாசலை: கநக கதலீ
வேஷ்டந ப்ரேக்ஷணீய: |
மத்கேஹின்யா: ப்ரிய இதி
சரவே சேதஸா காதரேண
ப்ரேஷ்யோபாந்த ஸ்புரிததடிதம்
த்வாம் தமேவ ஸ்மராமி ||

அந்த அழகிய குளத்தின் அருகே அழகிய இந்த்ர நீல மணிகளினால் செய்யப்பட்ட சிகரம் உள்ள தங்கமயமான

வாழைமரங்கள் இருக்கின்றன. ரமணீய க்ரீடா பர்வதமும் இருக்கின்றது.

'ஹே மித்ர! மின்னியதால் ஒளிவிடும் வெளிச்சத்தைப் போல் உன்னைக் கண்டு என் மனைவி மிகவும் சந்தோஷப் படுவாள் என்று எண்ணி நான் அவளை ஸ்மரணை செய் கின்றேன்.''

பாடல்: 15

ரக்த ஸோகச்சலகிசலய;
கேஸரச்சாத்ர காந்த:
பத்யாஸன்னௌ குரபகவ்ருதேர்
மாதவீமண்டபஸ்ய।
ஏக: ஸக்யாஸ்தவ வஹமயா
வாமபாதாபிலாஷீ
காங்க்ஷத்யன்யோ வதனமதிரம்
தோஹதச்சத்ம நாஸ்யா:॥

அங்கு கிரீடா பர்வதத்தின் அருகில் மாதவிலதா மண்ட பத்தின் அருகில் புதிய கொடிகளைக் கொண்ட சிகப்பு வர்ணமுள்ள அழகிய பௌலசிரி என்னும் கொடி விருக்ஷங் களும் உள்ளன.

அதில் ஒன்று உன் சகியின் வலது காலைத் தூக்க இஷ்டப்படுகிறது. மற்றொன்று அவளது முகத்தின் மதுவை வேண்டுகிறது. அதாவது அவளுடைய அழகை பருக நினைக் கின்றது.

பாடல்: 16

தன் மத்யே ச ஸ்படிகயலகா
காஞ்சநீ வாஸயஷ்டி—
ர் மூலே பத்தா மணிபிரநதி
ப்ரௌடவம்சப்ரகாசைஷ:।

தாலை: சிஞ்ஜாவலயஸுபகைர்நர்தித;
காந்தயா மே
யாமத்யாஸ்தே திவஸவிகமே
நீலகண்ட: ஸுஹ்ருத்வ: ||

இரண்டு விருக்ஷங்களுக்கு நடுவில் புதிய மூங்கிலினால் உண்டாகும் ஒளிபோல் காந்தியான மணிகளின் கீழ்பக்கம் செய்யப்பட்டு, மேல் பாகம் ஸ்படிகமணிகளினால் புதைக்கப் பட்ட தங்கநிற பட்டியுடன் அழகாக அமைக்கப்பட்டிருக் கிறது. பக்ஷிகள் உட்காரும் இடம் இதன்மேல் அமைக்கப் பட்டுள்ளது.

இதன் மீது தனது வளையல்களின் அழகிய மதுரமான ஒலியுடன் மனோஹர கைத்தட்டலுடன் என் பிரியமான காதலி (உன் நண்பன்) மயில்களின் நடனத்தைப் பார்த்துக் கொண்டிருப்பான். அந்த மயில்கள் பகல் வேளை முடிந்ததும் மாலையில் அங்கு வந்து உட்கார்ந்து விடும்.

### பாடல் : 17

ஏபி: சாதோ ஹ்ருதய நிகிதைர்
லக்ஷணைர் லக்ஷயேதா
த்வாரோபாந்தே விகிதவபுஷெள
சங்க பத்மெள ச த்ருஷ்ட்வா |
க்ஷாமசாயம் பவனமது நா
மத்வியோகேன நூநம்
சூர்யோபாயே நகலு கமலம்
புஷ்யதி ஸ்வாமபி க்யாம் ||

''ஹே நண்பா! அந்த சாதுவின் மனதில் லக்ஷக்கணக் கான லக்ஷணங்களை வைத்துக் கொண்டு, கதவிற்கு இரண்டு புறமும் இருக்கும் சங்க, பத்ம புஷ்பங்களைக் கொண்ட வீட்டை நிச்சயமாக நீ அறிவாய்.

என் விரஹத்தினால் க்ஷீணமடைந்த, சோபையில்லாத வீடு என்னுடையதுதான் என்று தெரிந்து கொள்வாய்.

சூரியன் இல்லாமல் கமலம் தன்னுடைய சோபையை இழந்துவிடும். அம்மாதிரி நான் இல்லாத எனது வீடும் இருக்கும்! தெரிந்துகொள்.''

பாடல் : 18

கத்வா ஸத்ய: சலபதநுதாம்
ஶீக்ர ஸம்பாத ஹேதோ:
க்ரீடாஶைலே ப்ரதமகதிதோ
ரம்யசானௌ நிஷண்ண: ।
அர்கஸ்யந்தர் பவனபதிதாம்
கர்தும ல்பால்ப பாஸம்
கத்யோதாலீவில ஸிதநிபாம்
வித்யுதுன்மேஷத்ருஷ்டிம் ॥

சீக்கிரம் வீட்டினுள் பிரவேசிக்க உன் சரீரத்தை குட்டி யானைப் போல் செய்து கொள்.

முதலில் சொன்னபடி அந்த அழகான க்ரீடா பர்வதத்தில் உட்கார்ந்திருக்கும் மந்த—மந்த பிரகாசம் கொடுக்கும் மின்மினிப் பூச்சிகள் கூட்டம் வரிசையாக இருக்கும். நீ உன்னுடைய ப்ரகாசமான மின்னலைப் பவனத்திற்குள் காட்டுவாயாக!

பாடல் : 19

தன்வீ ச்யாமா சிகரிதஶனா
பக்வபிம்பாதரோஷ்டீ
மத்யே க்ஷாமா சகிதஹரிணீ
ப்ரேக்ஷணா நிம்நநாபி: ।

*சிரோணீ பாராதல ஸகமநா*
*ஸ்தோகநம்ரா ஸ்தனாப்யாம்*
*யாதத்ர ஸ்யாத்யுவதிவிஷயே*
*ஸிருஷ்டிராத்யேவ தாது: ||*

*மெலிந்த சரீரமுள்ள யௌவனத்தின் மத்தியில் இருக்கும் கூர்மையான அழகிய பற்களைக் கொண்டவள். பழுத்த பழம் போல் இருக்கும் உதடுகளைக் கொண்டவள், சிறுத்த (மெலிந்த) இடையுடையவள் --பயந்து போன மான்களைப் போல் மருண்ட பார்வை உள்ளவள். ஆழ்ந்த நாபி உள்ளவள்.*

*அஜாக்ரதையான நடையும், மார்பகத்தின் பாரத்தினால் கொஞ்சம் குனிந்தும் இருப்பாள். மேலும் ப்ரஹ்மாவின் முதன் முதல் சிருஷ்டி என்ற அவள் (ஸத்ரீதான்) அந்த பகலில் என்னுடைய மற்றொரு பிராணன் என்று நினைப்பாயாக!*

### பாடல் : 20

*தாம் ஜாநீதா: பரிமிதககதாம்*
*ஜீவிதம் மே த்விதீயம்*
*தூரீபூதே மயி ஸஹசரே*
*சக்ரவாகீமிவை காம் |*
*காடோத்கண்டம் குருஷு திவஸேஷ்வேஷு*
*கச்சத்ஸு பாலாம்*
*ஜாதாம் மந்யே சிசிரமதிதாம்*
*பத்மிநீம் வான்யரூபாம் ||*

*தன்னுடைய துணைவன் வெகு தூரம் சென்றதால், சக்ரவாகீ பக்ஷியைப் போல் தனியாக இருப்பாள். கொஞ்சமாகப் பேசுவாள். அவளை நீ என்னுடைய ப்ராணன் என்று நினைப்பாயாக!*

நான் ப்ரபவ உத்கண்ட (சோகமான) அந்த பாலாவை விரஹத்தினால் நீண்ட தினங்களாக தாபப்படும் அவளை நான் பனியினால் அடிபட்ட கமலியைப் போல் எண்ணுகிறேன்.

சக்ரவாகீபக்ஷி இரவில் தன்னுடைய ஆண்பறவையைப் பிரிந்து இருக்கும்.

ஏனெனில் சீதையைப் பிரிந்து வாடிய ஸ்ரீராமனை இந்த சக்ரவாக பக்ஷிகள் கேலி செய்ததால் இவைகளுக்கு இரவில் தனித்தனியாக இருக்கும்படியான சாபம் ஏற்பட்டதாம் என்பது புராணம்!

பாடல்: 21

நூநம் தஸ்யா: ப்ரபலருதிதோச்
  சூநநேத்ரம் ப்ரியாய
நி: ச்வாஸாநாமசிசிரதயா
  பின்ன வர்ணாத ரோஷ்டம் ।
ஹஸ்தன்யஸ்தம் முகமஸகல
  வ்யக்தி லம்பாலகத்வா
தின்தோர்தைன்யம் த்வதனுஸரண
  க்லிஷ்ட காந்தேர் விபர்தி ॥

அதிகமாக அழுத்தினால் வீங்கிய கண்களுடன், மூச்சு விடுவது ரொம்ப தாபமாக இருந்தால், நிறம் மங்கிய காந்தஹீன கீழ் உதடுகளைக் கொண்டும், நீண்டு தொங்கும் அழகிய தலைமுடியை வாராமல் கையில் ஏந்திக் கொண்டும், இந்த முடியால் முகம் தெரியாமல் மறைந்து இருப்பது போன்றும் தோன்றுவாள் என் பிரியமான காதலி.

இப்பேர்ப்பட்ட என் காதலியின் முகம் எப்படி இருக்கும் என்றால் மங்கலான ஒளியில் சந்திரன் தீனமாக ஒளிர்வது போன்று இருப்பாள். இவ்விதம் நான் எண்ணுகிறேன்.

## பாடல் : 22

ஆலோகே தே நிபததி புரா
ஸா பலிவ்யாகுலா வா
மத்ஸாத்ருஷ்யம் விரஹதுனா
வா பாவகம்யம் லிகந்தி ।
ப்ருச்சந்தி வா மதுரவசனம்
சாரிகாம் பஞ்சரஸ்தாம்
கஞ்சித பர்து: ஸ்மரசி ரசிகே
த்வம் ஹி தஸ்ய ப்ரேயதி ॥

"ஹே மேகமே! அவள் தேவதைகளின் பூஜையில் ஈடுபட்டிருப்பாள். இல்லையெனில் விரஹத்தினால் இளைத்தவளாக தோன்றுவாள். என்னுடைய சித்திரத்தை அனுமானத்தினால் தீட்டிக் கொண்டிருப்பாள்.

ஹே ரசிகே! உன் ஸ்வாமியின் நினைவு உனக்கு வருகிறது. ஏனெனில் நீ அவனுடைய ப்ரியமானவள் இல்லையா?"

இவ்விதம் மதுர வசனம் பேசும் கூண்டு கிளிகள் மைனாக்கள் கேட்பது உனக்குத் தெரியும்.

## பாடல் : 23

உத்ஸங்கே வா மலிநவஸநே
ஸெம்ய நிக்ஷிப்ய வீணாம்
மத்கோத்ராங்கம் விரசிதபதம்
கேயமுத்காது காமா ।
தன்த்ரீ பார்த்ராம் நயனஸலிலை:
ஸாரயித்வா கதம்சித்
பூயோ பூய: ஸ்வயமபி க்ருதாம்
மூர்ச்சனாம் விஸ்மரந்தி ॥

''ஹே ப்ரியதர்ஷன்! அழுக்கு வஸ்திரங்கள் மடியில் வீணையை வைத்துக் கொண்டு என்னுடைய நாமத்தை சிந்தித்துக் கொண்டே தன்னால் இயற்றப்பட்ட கீதங்களை உயர்ந்த குரலில் பாடிக் கொண்டு இருப்பாள் என் காதலி!

கண்ணீரினால் நனையப் பட்ட வீணையை ஏதோ ஒரு விதமாக துடைத்துக் கொண்டே திரும்பத்திரும்ப தன்னால் இயற்றிய கானத்தை ஆரோஹணம், அவரோஹனத்தில் பாடுவாள். ஸ்வரத்தை சரி செய்யத் தடுமாறுவாள் இப்படிப்பட்ட என் மனைவி உனக்கும் பார்க்கக் கிடைப்பாள்.

யக்ஷ பத்தினிகள் தேவர்களினால் உண்டானவர்கள். ஆகையால் அவர்கள் எப்போதும் உயர்ந்த குரலிலேயே பாடுவார்கள்.

### பாடல்: 24

சேஷான் மாஸாந்விரஹதிவஸ்
ஸ்தாபிதஸ் யாவதேர்வா
வின்யஸ்யந்தீ புவி கணநயா
தேஹலிதத்த புஷ்பை:।
மத்ஸங்கம் வா ஹ்ருதய நிஹித
ஆரம்ப மாஸ்வா தயந்தீ
ப்ராயேணைதே ரமண விரஹேஷ்வ
ங்கநாநாம் விநோதா;॥

இவ்வாறு இல்லையெனில் என்னைப் பிரிந்த நாளிலிருந்து (விரஹதினத்திலிருந்து) நிச்சயம் செய்யப்பட்ட மிகுதி மாதங்களை எண்ணுவதற்காக வாசற்படியில் இருக்கும் புஷ்பங்களைக் கொண்டு எண்ணி எண்ணி பூமியில் வைத்துக் கொண்டு இருப்பாள். என் காதலி!

அவ்வாறில்லையேல் கற்பனையில் நானும் அவளும் சேர்ந்த தினத்திலிருந்து இன்பத்தை எண்ணி மகிழ்வடையும் என் பிரியதர்சினியை நீ பார்ப்பாய்.

பாடல் : 25

ஸவ்யா பாராமஹநி ந ததா
பீடயேன் மத்வி யோக:
சங்கே ராத்ரௌ குருதரசுசம்
நிர்விநோதாம் சகீம்தே ।
மத்ஸம் தேசை: சுகயிதுமலம் பஷ்ய
ஸாத்வம் நிசீதே
தாமுன்நித் ராமவநிசயநாம்
ஸௌவாதாயநஸ்த : ॥

பகலில் தன்னுடைய காரியங்களில் ஈடுபட்டிருக்கும் உன்னுடைய சகிக்கு என்னுடைய பிரிவு அத்தனை பாதிக்காது. ஆனால் இரவில் வினோத ரஹிதமான அத்யதிகமான சோகம் அவசியம் உண்டாகும் என்று நினைக்கின்றேன்.

அர்த்த ராத்திரியில் பூமியின் மீது படுத்து இருக்கும் அந்த பதி விரதா ஸ்திரீக்கு என் சந்தேசத்தை (செய்தியை) சுகம் கிடைக்கும்படிக் கூறுவாயாக!

பாடல் : 26

ஸ்நிக்தா: சக்ய: கதமபி திவா
தாம் நா போக்ஷயந்தி தன்வீ
மேக ப்ரக்யா பவதி ஹி ஜகத்யங்
கநாநாம் ப்ரவ்ருத்தி : ।
ஸத்வம் ராத்ரௌ ஜலத சயனா
ஸந்நவாதாய நஸ்த:
காந்தாம் சுப்தே ஸதி பரிஜநே
வீதநித்ரா முபேயா : ॥

பகலில் சகிகள் அந்த துர்பல சரீரமுள்ள ஸ்திரீயை விட மாட்டார்கள். ஏனெனில் உலகில் ஸ்திரீகள் இயல்பு ஒரே மாதிரிதான் எங்கும் இருக்கும்,

ஹே மேகமே! படுக்கைக்கு அருகில் இருக்கும் ஜன்னலின் வழியே உள்ளே சென்று தாசிகள் தூங்கிய பின் பிரியதர்சனியுடன் போய்க் கூறுவாயாக!

பாடல் : 27

அந்வேஷ்டவ்யாமவநிசயநே
ஸம்நிகீர்ணை கபார்ச்வாம்
தத்பர்யங்க ப்ரகலவித் (ந)
வைச்சிந்நஹாரைரிவாஸ்ரை: ।
பூயோ பூய: கடிநவிஷமாம்
ஸாதயந்தீம் கபோலா—
தாமோக்தவீயாமயமித
நகேணைக வேணீம் கரேண ।।

பூமியில் படுக்கையில் ஒரே பக்கமாக படுத்து இருக்கும் என் பிரியாவின் அருகே முத்துமணிகள், சிதறல் போல் சிதறி இருக்கும்.

கத்திரிக்காமல் விட்ட நீண்ட நகமுள்ள விரல்கள், கைகளினால் அவிழ்த்து விடப்பட்ட உலர்ந்த அவள் கூந்தல் அவள் கன்னங்களில் வீழ்வதால் அடிக்கடி அதை அகற்றி விட்டுக் கொண்டே இருப்பாள். இப்படிப்பட்ட என் பிரியா விடம் நீ செல்வாயாக!

பாடல் : 28

ஆதிஷாமாம் விரஹசயனே
ஸம்நிஷண்ணை கபார்ச்தவாம்
ப்ராசிமூலே தநுமிவ கலாமாத்ரே
சேஷாம் ஹிமாம்ஷோ: ।
நீதா ராத்ரி: க்ஷண இவ மயா
ஸார்த மிச்சாரதைர்யா
தாமேவோஷ்ணைர்விரஹ மஹதி
மச்ருபிர்யாபயந்தீம் ।।

மானஸீக ரோகத்தினால் இளைத்து இருக்கும் அவள் விரஹதாபத்தால் படுக்கையில் ஒரே ஒரு பக்கம் படுத்து இருப்பாள்.

கிழக்கு பக்கத்தில் ஒரே ஒரு கலையுடன் மிகுதியிருக்கும் சந்திரனைப் போல் ஆக்ருதி இருக்கும் அவள் என்னுடன் இருக்கும் பொழுது அதிக கேளிக்கைகளினால் இரவை ஒரு க்ஷணமாகக் கழித்து வந்தாள்.

இப்போது இந்த நீண்ட விரஹ இரவை அவளுடைய சூடான கண்ணை சிமிட்டிக்கொண்டு விழித்திருப்பாள். நீ அவளிடம் போ.

பாடல் : 29

பாதாநிந்தோ ரம்ருதசி சிராஞ்ஜால
 மார்கப்ரவிஷ்டாந்
பூர்வப்ரீத்யா கதமபிமுகம்
 ஸம்நிவ்ருத்தம் ததைவ ।
வக்ஷுः கேதாத்சலிலகுருபி:
 பக்ஷ்மபிச்சாதயந்தீம்
ஸாப்ரேஹ்ரீவ ஸ்தலகமலிநீம்
 நப்ரபுத்தாம் நஸுப்தாம் ||

ஜன்னலிலிருந்து வெளியே பார்க்கும் அந்த விழிகள் முன் மாதிரி அம்ருதம் போல் சீதளமான சந்திர கிரணங்களில் மோதிவிட்டு ஸ்நேகத்தின் காரணமாக மீண்டுவரும்.

அந்த கண்கள் துக்கத்தினால் கண்ணீர் நிறைந்த கண் இமைகளை மூடிக்கொண்டு மேகத்தினால் மூடிய கமலினிகள் மலர்ந்தும் மலராதது போல் இருப்பாள். அதாவது என் காதலி கொஞ்சம் தூங்குவதும், கொஞ்சம் விழித்துக் கொண்டும் இருப்பாள். அப்படிப்பட்ட என் பிரியாவிடம் நீ போவாயாக!

பாடல் : 30

நி:ச்வாஸேநாதரகிஸலய—
க்லேசிநா விக்ஷிபன்தீம்
சுத்தஸ்நாநாத்பருஷமலகம்
நூநமாகண்டலம்பம் ।
மத்ஸம்போக: கதமுபநமேத்ஸீவ—
ப்நஜோபிதி நித்ரா—
மாகாங்க்ஷந்தீம் நயநஸலிலோத்—
பீடருத்தாவகாஷாம் ॥

எண்ணையே இல்லாமல் சுத்தமான ஸ்நாநத்தினால் உலர்ந்த கன்னங்களின் மீது விழுந்திருக்கும் சுருள் முடிகளை மிருதுவான உதடுகளினால், ஆடவைக்கும் பெருமூச்சு மூலம் நிச்சயம் ஸ்வப்பனத்திலாவது என்னுடன் இருப்பது போல் விசாரம் செய்து மகிழ்ந்து போவாள்.

இதே எண்ணத்தினால் கண்ணீர் வடித்து நித்திரையைப் போக்கிக் கொண்டு இருக்கும் என் காதலியின் அருகில் போவாயாக.

பாடல் : 31

ஆத்யே பத்தா விரஹதிவஸேயா
சிகா தாம ஹித்வா
சாபஸ்யாந்தே விகலிதசுசா தாம்
மயோத்வேஷ்டநீயாம் ।
ஸ்பர்சக்லிஷ்டாமயமிதநகே—
—நாஸக்ருத்சாரயந்தீம்
கண்டாபோகாத்கடிந விஷமாமேக—
—வேணீம் கரேண ॥

விரஹத்தின், வியோகத்தின் முதல்நாள் புஷ்பமாலைகளை எல்லாம் தியாகம் செய்துவிட்டு எந்த மாதிரி பின்னலைப் பின்னி இருந்தாளோ, சாயத்தின் முடிவில் என்னால் அவிழ்க்கப்பட இருக்கும், தொடக்கூட முடியாத

நிலையில் கடினமான சிக்கலுடன் இருக்கும் ஒரே பின்னலை வெட்டாத நகத்துடன் தன் கைகளால் அந்தப் பின்னலைக் கன்னத்திலிருந்து அடிக்கடி தள்ளிக் கொண்டே இருக்கும். என் பிரியாவிடம் போய் வா.

பாடல்: 32

ஸா ஸம்ந்யஸ்தாபரணமபலா
பேசலம் தாரயந்தீ
சய்யோத்ஸங்கே நிஹிதமஸக்ருத்
துஃக்க து:க்கேன காத்ரம் ।
த்வாமப்யஸ்த்ரம் நவஜலமயம்
மோசயிஷ்யத்யவச்யம்
ப்ராய: ஸர்வோபவதி கருணா—
வ்ருத்திரார்த்ராந்தராத்மா ॥

அத்யதிக துக்கத்துடன் ஆபரணங்கள் ஒன்றுமில்லாமல் கோமள சரீரத்தைக் கொண்ட அந்த அபலை (என் காதலி) உன்னைக் கண்டதும் குளிர்ந்த ஜலத்தினால் தன் கண்ணீரைத் துடைத்து கீழே சிந்துவாள்.

ஏனெனில் என் காதலி கோமள ஹ்ருதயம் கொண்டவள். எல்லோருமே தயாள சுவபாவத்துடன் இருப்பார்கள்.

பாடல்: 33

ஞாநே ஸக்யாஸ்த்வ மயிமந:
ஸம்ப்ருத ஸ்நேஹமஸ்மா
தித்தம் பூதாம் ப்ரதமவிரஹே
தாமஹம் தர்கயாமி ।
வாசாலம் மாம்நகலுசுபகம்—
—மன்யபாவ: கரோதி
ப்ரத்யக்ஷம்தே நிகிலமசிராத்
ஆப்ராத ருக்தம் மயா யத் ॥

"உன்னுடைய சகியான எனது காதலி என்மீது அதிக ஸ்நேகம் வைத்திருப்பாள் என்று எண்ணுகிறேன்.

அதனால்தான் இந்த ப்ரதம வியோகத்தில் அவள் எப்படி இருப்பாள் என்று அனுமானமாகக் கூறுகிறேன். இருந்த போதிலும் எனக்கு நானே சௌக்யவான் என்று கூற மறுக்கிறேன்.

''ஹே! சகோதரா! நான் உன்னிடம் என்னென்ன சொன்னேனோ சீக்கிரம் உன் எதிரில் அதெல்லாம் அவசியம் வரும்.''

பாடல்: 34

ருத்தா பாங்க ப்ரஸரமலகை—
—ரஞ்ஜ நஸ்நேஹசூந்யம்
ப்ரத்யாதேசாதபிச மதுநோ
விஸ்மருதப்ரூவி லாஸம் |
த்வய்யாஸந்நே நயநமுபரிஸ்பந்தி
சங்கே ம்ருகாக்ஷ்யா
மீநக்ஷோபாஞ்சல குவலய
ஸ்ரீதுலாமேஷ்யதீதி ||

சுருண்ட கூந்தலைச் சரி செய்து மடக்கிக் கொண்டு மையில்லாத கண்களுடன் மத்யத்தை தியாகம் செய்ததினால் புருவங்களின் விலாசத்தை மறந்தவள் நீ அருகில் வந்ததும் இமைகள் படபடக்க உன்னைப் பார்ப்பாள்.

என் காதலியின் கண்கள் மீன்களைப் போல் இங்கும் அங்கும் அலைவதால் சஞ்சலமடைந்து இருக்கும். அது நீல சமலம் போல் சோபைக்குச் சமானமாக இருக்கும். இம் மாதிரிதான் நான் நினைக்கிறேன்.

பாடல்: 35

வாமச்சாஸ்யா: கரருஹபதைர்முச்ய
மாநோ மதீயை—
—ர்முக்தா ஜாலம் சிரபரிசிதம்
த்யாஜிதோ தைவகத்யா

ஸம்போகாந்தே மம ஸமுசிதோ
ஹஸ்தஸம்வாஹநாநாம்
யாஸ்யத்யூரு: ஸரஸகதலீ
ஸ்தம்ப கௌரச்சலத்வம் ||

என்னுடைய (யக்ஷன்) நகங்களின் சின்னங்களினால், முக்த பாக்யத்தின் சிரபரிசித முக்தா மணிகளின் அழகினால் சந்தோஷத்தோடு காணப்படுகிறாள். இப்படிப்பட்ட சம்போகத்திற்குப் பின் என்னால் அழுத்தப்பட்ட ஈரமான வாழைமரத் தண்டுக்கு ஒப்பான என் காதலியின் வலது தொடைகள் துடிதுடிக்கும்.

பாடல் : 36

தஸ்மிந்காலே ஜலத யதிஸா
லம்தநித்ராசுகா ஸ்யா—
தன்வாஸ்யைநாம் ஸ்தநிதமுகோ
யாமமாத்ரம் ஸஹஸ்வ
மாபூதஸ்யா: ப்ரணயிநிமயி
ஸ்வப்ந லப்தே கதம்சித்
ஸத்ய: கண்டேச்யுதபுஜ
லதாக்ரந்தி கோடோபகூடம் ||

''ஹே மேகமே! நீ போகும்போது ஒருவேளை என் காதலி நித்திரையின் சுகத்தை அனுபவித்துக் கொண்டு இருந்தால் நீ கர்ஜனை செய்யாமல் பிரஹாரம் வரை பின்னால் எதிர்பார்த்துக் கொண்டு உட்கார்ந்திரு.

அவள் ஸ்வப்னத்தில் எங்கள் இருவருடைய ஆலிங்கன சுகத்தை அனுபவித்துக் கொண்டு லதா போன்ற புஜங்களின் அரவணைப்பை இழந்து விடாமல் இருக்க வேண்டும். ஆகவே அவள் ஸ்வப்பனத்தில் இருந்தால் அவளை நீ எழுப்பாதே.''

பாடல் : 37

*தாமுத்தாப்ய ஸ்வஜல கணிகா*
*சீதலே நாநிலே ந*
*ப்ரயாச்வஸ்தாம் ஸமம பிநவைர்*
*ஜாலகைர் மால தீநாம் ।*
*வித்யுத்கர்ப: ஸ்திமித நயநாம்*
*த்வத்ஸ நாதே கவாக்ஷே*
*வக்தும் தீர: ஸ்தநிதவச*
*நைர்மாநி நீம் ப்ரக ரமேதா : ॥*

உன்னுடைய சீதள ஜலத்துளிகளாலும், சீதள காற்றினாலும் என் ப்ரியாவை நீ எழுப்பிடுவாய்!

மல்லிகையின் புதிய பூக்கொத்துக்களைக் கொண்டு நீ ஸ்வஸ்த்தமாக இருக்கும் ஜன்னல்களின் கண்பார்வையை அழுத்தி நோக்கிக் கொண்டு இருக்கும் என் மனஸ்வினியிடம் மின்னல் தைரியத்துடன் வெளிப்படுத்த கர்ஜனை ரூபி வசனத்துடன் பேச ஆரம்பிப்பாயாக!

பாடல் : 38

*பர்துர்மித்ரம் ப்ரியமவிதவே*
*வித்தி மாமம் புவாஹம்*
*தத்ஸம் தேஷைர்ஹ்ரு தயநிஹிதை*
*ராகதம் த்வத் ஸமீபம் ।*
*யோ ப்ருந்தாநி த்வரயதி பதி*
*க்ஷ்ராம்யதாம் ப்ரோஹதாநாம்*
*மந்த்ர ஸ்நிக்தைர்த்வநி பிரபலா*
*வேணி மோக்ஷாத் ஸுகாநி ॥*

'ஹே சௌபாக்யவதி! நான் உன் ஸ்வாமியின் பிரிய மித்ரன்! மேலும் உன் ஸ்வாமி அனுப்பிய சந்தேசங்களை எடுத்துக் கொண்டு வந்திருப்பவன் என்றும், மேகம் என்றும் நினை.

மேகமானது மெதுவான இன்பமான த்வனியுடன் அபலை ஜனங்களின் ஒற்றை நாடிப் பின்னல்களை அவிழ்க்க பிரயத்தனம் செய்வதுடன் வழிப்போக்கர்களின் சோம்பலைப் போக்கி சீக்கிரம் நடக்கச் செய்யவும் வழி காட்டும்.''

பாடல் : 39

இத்யாக்யாதே பவ நதநயம்
மைதிலீ வோன்முகீ ஸா
த்வாமுத் கண்டோச் சவஸிதஹ்ருதயா
வீக்ஷ்ய ஸம்பாவ்ய சைவ ।
ச்ரோஷ்யத்ய ஸ்மாத்பர மவஹிதா
ஸெம்ய ஸீமந்தி நீ நாம்
காந்தோதந்த: ஸுஹ்ருதுபநத:
ஸம்கமாத்கிம் சிதூந : ॥

இவ்விதம் நீ கூறினாயானால் அதிகத் துயரத்தினால் மேலே உயர்ந்த முகத்துடன் துள்ளும் ஹ்ருதயம் கொண்ட என் காதலி ஹனுமானுடைய சீதையைப் போல் உன்னைப் பார்த்து மரியாதை செய்வாள்.

எச்சரிக்கையுடன் உன்னைப் பார்ப்பாள்.

ஏனெனில் பிரிய மித்ரர்கள் மூலம் கிடைக்கும் சமாசாரம் ஸ்திரீகளுக்கு சமாகமத்தைவிட அதிக ப்ரியமாக இருக்கும்.

பாடல் : 40

தாமாயுஷ்மந்மம ச வசநாதாத்
மநச்சோ பகர்தும்
ப்ருயா ஏவம் தவ ஸஹசரோ
ராமகிர்யாச்ரமஸ்த: ।

அவ்யாபந்ந: குசலமபலே ப்ருச்சதி
த்வாம் வியுக்த:
பூர்வாபாஷ்யம் ஸுலபவிபதாம்
ப்ராணிநாமேததேவ ||

ஹே ஆயுஷ்மான்! என்னுடைய நிவேதனத்தை பரோபகார எண்ணத்துடன் கூட உன்னை நீயே விட்டுக் கொடுத்துக் கொண்டு என் காதலியிடம் போய் இம்மாதிரி கூறுவாயாக.

"ஹே அபலே! உன்னுடைய பிரியமான கணவன் என் தோழன், ராமகிரி ஆஸ்ரமத்தில் ஜீவித்துக் கொண்டு இருக்கிறான். உன்னைப் பிரிந்து போன அவன் உன்னைப் பற்றிய குசல சமாசாரங்களைக் கேட்கிறான். ஏனெனில் வழக்கமாக ஆபத்தில் உள்ளவர்களிடம் முதலில் குசலமங்கள சமாசாரம் தான் கேட்க வேண்டும்.

பாடல் : 41

அங்கேநாங்கம் ப்ரதனு தனுநா
கோடதப்தேந தப்தம்
ஸாஸ்த்ரேணா க்ருதமவிரதோ –
த்கண்டமுத் கண்டிதேந |
உஷ்ணோச்சவாஸம் ஸமதிகதரோ
ச்சவாஸிநா துரவர்தீ
ஸம்கல்பைஸ்தைர்விசதி விதிநா
வைரிணா ருத்தமார்க: ||

ப்ரதிகூல பாக்யம், விதியினால் தடுத்து நிறுத்தப்பட்ட, தூரத்தில் இருக்கும் உன்னுடைய வாழ்க்கைத் துணைவன் துர்பலமாகவும், அத்யதிக உஷ்ணமாகவும், துக்கத்துடனும், கண்ணீருடனும், தொண்டை அடைக்க நீண்ட பெருமூச்சு விட்டுக் கொண்டு மெலிந்த உடலுடன் உஷ்ணமான மூச்சுடனும் அதிக துக்கத்தினால் ஏற்பட்ட சரீரத்துடனும் இருக்கிறான்" என்று கூறினான் காதலன்.

### பாடல் : 42

*சப்தாக்யேயம் யதபி கில தே*
*ய:சகீனாம் புரஸதா—*
*த்கர்ணே லோல: கதயிதும—*
*பூதாநநஸ்பர்சலோபாத் ।*
*ஸோதிக்ராந்த: ச்ரவணவிஷயம்*
*லோசநாப்யா மக்ருஷ்ட*
*ஸ்த்வாமுத்கண்டாவிரசிதபதம்*
*மன்முகேநேத மாஹ ॥*

*உன் காதலன் உன்னுடைய சகிகள் எதிரில் சப்தங்களைச் செய்யக்கூட கூசுவான். சொல்ல வேண்டிய வார்த்தைகளை முகத்தை முத்தமிடும் காரணமாக காதுகளில் சொல்ல ஆசைப்படுவான்.*

*நிச்சயம் காதுகளில் போய் விழும் சப்தங்களை உன் பிரிய கணவன் சொன்னான் என்று என் மூலம் அவளிடம் சொல்வாயாக!*

### பாடல் : 43

*ச்யாமஸ்வங்கம் சகித ஹரிணீ*
*பீரேக்ஷணேத்ரு ஷ்டிபாதம்*
*வக்த்ரச்சாயாம் சசினி சிகிநாம்*
*பர்ஹபாரேஷு கேசான் ।*
*உத்பஷ்யாமி ப்ரதநுஷு நதீ—*
*வ்சிஷு ப்ரவிலாஸான்*
*ஹந்தைகஸ்மிந்க் வசிதபி ந*
*தே சண்டி ஸாத்ருஷ்ய மஸ்தி ॥*

*ப்ரியங்கு லதாவில் உன் சரீரத்தை, மான்களின் மருண்ட விழிகளில் உன் நேத்திரத்தை, சந்திரனில், உன்னுடைய முக காந்தியை, மயில்களின் இறகுகளில் உன்னுடைய கேசத்தின் அழகை, நதியின் சிறு சிறு அலைகளில் உன்னுடைய புருவங்களின் வளைவு நெளிவுகளைப் பார்க்கிறேன்.*

''ஹே கோபம் கொண்ட பெண்ணே! எனக்கு என்ன துக்கம் என்றால் எதிலுமே உன்னுடைய சமானமான அழகைக் காணோம் என்பதுதான்!''

பாடல் : 44

த்வாமாலிக்ய ப்ரணயகுபிதாம்
தாது ராகை: சிலாயா—
மாத்மாநம் தே சரண பதிதம்
யாவதிச்சாமி கர்தும் ।
அஸ்த்ரை ஸ்தாவன் முஹுருரு பசிதைர்
த்ருஷ்டிராலுப் யதே மே
க்ருரஸ்தஸ் மிந்நபி ந ஸஹதே
ஸம்கமம் நௌ க்ருதாந்த : ॥

கேரு போன்ற தாதுக்களின் வர்ணம் கொண்டு கோபத்துடன் இருக்கும் உன்னை கற்களில் வடித்து சித்திரம் போல் செய்து என்னை நானே உனது காலடியில் விழுந்தவாறு க்ஷமிக்கக் கோருகிறேன்.

திரும்பத் திரும்ப வரும் கண்ணீர் பிரவாஹத்தினால் என்னுடைய த்ருஷ்டியே மங்கி இருக்கிறது. க்ருரமானி தெய்வம் அந்த சித்திரத்திலும் நம் இருவரையும் சேர்க்கப் பட விடவில்லை.

பாடல் : 45

மாமாகாஷ ப்ரணி ஹித புஜம்
நிர்தயாஷ்லே ஷஹேதோ
ர்லம்தா யாஸ்தே கதமபி
மயா ஸ்வப்ன ஸம்தர்ஷனேஷு ।
பஷ்யந்தீனாம் நகலு பஹுஷோ
நஸ்தலீ தேவதா நாம்
முக்தாஸ்தூலா ஸ்தருகிஸல
யேஷ்வஷ்ருலேஷா: பதந்தி ॥

ஸ்வப்ன ஞானத்தில் என்னால் கிடைக்கப்பட்ட உன்னு டைய ஆழ்ந்த ஆலிங்கனத்திற்காக ஆகாயம் முழுவதும் நிறைந்துள்ள புஷ்பங்களைக் கொண்ட என்னைப் பார்த்த வாறு வனதேவதைகளின் முத்தைப் போன்ற பெரிய கண்ணீர் துளிகள் விருக்ஷங்களின் நவபல்லவங்களில் விழுவதைப் பார்க்க வேண்டி வரும்பார்.

பாடல் : 46

*தாரஸிக்தஸ்தல ஸுரபிணஸ்—*
*த்வந்முகஸ்யாஸ்யபாலே*
*தூரீபூதம் பீரதநுமபி மாம்*
*பஞ்சபாண: க்ஷிணோதி ।*
*வர்மாந்தேஸ்பாந்விகணய*
*கதம் வாஸராணி வ்ரஜேயு—*
*ர்திக்ஸம்ஸக்த ப்ரவிததகந*
*வ்யஸ்தஸுர்யாதபாநி ॥*

''ஹேபாலா! மன்மதன் ஜலதாரைகளினால் பாய்ச்சப் படும் பூமியின் சுகந்த புஷ்பம் போல உள்ள உன் முகத்தி லிருந்து துர்பலமான தண்ணீர் வருவதைக் காணமுடியாம லில்லை.

ஆனால் வெய்யிற் காலத்தின் முடிவில் எல்லா திசை களிலிருந்தும் பரவலாக இருக்கும் மேகங்கள் மூலம் வெய்யி லைத் தடுத்து நிறுத்தும் தினத்தை எப்படிக் கழிப்பாய், இதை நினைத்துப் பார்.''

பாடல் : 47

*மத்வா ஸத்ய: கிஸலயபுடாந்தே—*
*வதாருத்குமாணாம்*
*யே தத்க்ஷீரஸ்த்ருதிஸுரபயோ*
*தக்ஷிணே ந ப்ரவ்ருத்தா: ।*

ஆலிங்கயந்தே குணவதி மயா
தே துஷாராத்ரிவாதா:
பூர்வம் ஸ்ப்ருஷ்டம் யதிகில
பவேதஸ்கமேபிஸ்தவேதி ||

தேவதாரு விருஷங்களில் புதிய துளிர்களால் இலைகள் மூலம் தத்காலம் விகிஸிதமடைந்து அதிலிருந்து விழும் பாலின் பெருக்கத்தின் வாசனையினால் அதை எடுத்துக் கொண்டு ஹிமாலயத்தின் காற்று தக்ஷிணத்தின் ஓரமாக அடிக்கும்.

''ஹே குணவதி! அந்தக் காற்று ஒருக்கால் உன் சரீரத்தை முதலில் தொடும். இதே காரணத்தால் நான் அந்த காற்றை ஆலிங்கனம் செய்தவாறு இருக்கிறேன்.

## பாடல் : 48

ஸம்க்ஷிப்யேத க்ஷண இவகதம்
தீர்கயாமா த்ரியாமா
ஸர்வாவஸ்தாஸ் வஹரபிகதம்
மந்தமந்தாதபம் ஸ்யாத் |
இத்தம் சேதச்சடுலநயனே
துர்லபப்ரார்தநம் மே
கோடோஷ்மாபி: க்ருதமசரணம்
த்வத்வியோகவ்யதாபி: ||

நீண்ட இரவுகள் எப்படி க்ஷணமாக குறைந்து சிறிதாகிறதோ — எல்லா ருதுக்களிலும் எப்படி வெப்பம் மந்தமாக அடிக்கிறதோ — ஹே சஞ்சலமான கண்களுடையவளே! இம்மாதிரி துர்பலமான மனோபாவங்களைக் கொண்ட என் மனதிற்கு அத்யதிகமான தாபங்களைக் கொடுக்கும் விரஹவேதனையை நான் சகிக்க முடியாமல் சகித்து வருகிறேன்.''

பாடல் : 49

நந்வாத்மாநம் பஹு விஹண
யந்நாத்மனைவாவலம்பே
தத்கல்யாணி த்வமபி நிதராம்
மாகம: காதரத்வம் |
கஸ்யாத்யந்தம் ஸுகமுபநதம்
து:க்க மேகாந்த தோவா
நீசைர்கச்சத்யுபரிச
தஷா சக்ரநேமிக்ரமேண ||

''ஹே ப்ரியே! என்னை நானே சமாதானம் செய்து கொண்டும் சகித்துக் கொண்டும் தைரியமாக இருக்கிறேன். அதனால் ஹே கல்யாணி நீயும் அதிகமாக துக்கப்படாதே!

எவருக்கு ஒரே சமயம் சுகமும் துக்கமும் கிடைத்திருக் கிறது? வண்டிகளின் தசை என்னும் சக்கரம் மேலும் கீழும் போய்க் கொண்டுதானிருக்கும்.

பாடல் : 50

சாபாந்தே மே புஜகஷயநாது—
த்திதே சார்ங்க பாணௌ
சேஷாந்மாஸாந்கமய சதுரோ
லோசனே மீலயித்வா |
பச்சாதாவாம் விரஹகுணிதம்
தம் தமாத்மாபிலாஷம்
நிர்வேக்ஷ்யாவ: பரிணதசரஞ்
சந்த்ரிகாஸு க்ஷபாஸு ||

கைகளில் சாரங்கம் என்னும் தனுஷ் வைத்திருக்கும் விஷ்ணு எப்போது சேஷநாகம் என்னும் படுக்கையிலிருந்து எழுந்திருப்பாரோ அப்போது என் சாபத்தின் முடிவு உண்டாகும்.

ஆகவே இன்னும் மீதமுள்ள நான்கு மாதங்களைக் கண்களை மூடிக் கொண்டு கழித்துவிடு.

பின்னால் நாம் இருவரும் சரத் ருதுவின் பூர்ண சந்திர ஒளியில் வியோகத்தினால் ஏற்பட்ட துக்கங்களை ஒழித்து நமது அபிலாஷைகளை முழுதும் அனுபவிப்போம்.

பாடல்: 51

பூயஷ்சாஹ த்வமபி சயனே
கண்டலங்நா புராமே
நித்ராம் கத்வா கிமபிருததீ
சஸ்வநம் விப்ரபுத்தா।
ஸாந்தர்ஹாசம் கதிதமஸக்ருத்
ப்ருச்சதச்ச த்வயாமே
த்ருஷ்ட: ஸ்வப்னேகிதவ
ரமயன்காமபி த்வம் மயேதி ॥

நீ முதலில் படுக்கையில் என்னை ஆலிங்கனம் செய்த வாறு படுத்திருப்பாய். ஏதோ திடீரென்று அழுது கொண்டே எழுந்திருப்பாய்.

பின்னால் திரும்பத் திரும்பக் கேட்டால் நாணத்துடன் நீ கூறுவாய்! ''நான் ஸ்வப்னத்தில், நீ யாரோ ஒரு பெண்ணுடன் சம்பாஷணை செய்து கொண்டு இருக்கிறாய், என்று பார்த்தேன்'' என்பாய்.

பாடல்: 52

ஏதஸ்மாந்மாம் குஷலிநமபி
ஞானதாநாத் விதித்வா
மா கௌல்நாதஸித நயனே
மய்யவிச்வாஸி நீ பூ:।
ஸ்நேஹாநாஹீ: கிமபி விரஹே
த்வாஸநஸ்தே த்வபோகா—
திஷ்டே வஸ்துந்யுபசித ரஸா:
ப்ரேமராஷ் பவந்தி ॥

''ஹே மைதீட்டிய கண்களை உடையவளே! நீ அறியக் கூடிய அடையாளச் சின்னம் கொடுத்த என்னை சௌக்கிய மாக இருக்கிறான் என்று நினை.

உலக நிந்தனையில் ஆழ்ந்து உன்னுடைய நம்பிக்கையை இழக்காதே! நமது சிநேகம் முறிய வியோகத் தில் கண்டபடி யாவரும் கூறுவார்கள். ஆனால் அவர்கள் சிநேகம் இல்லாமையால் அபீஷ்ட வஸ்துவின் விஷமாக ப்ரேமைக்கு எதிராகவும் பேசுவார்கள்.

பாடல் : 53

ஆஷ்வாஸ்யைவம் ப்ரதமவிரஹோத
க்ரஷோகாம் ஸகீம் தே
ஷைலாதாஷு த்ரிநயன வ்ருஷோத்
காத கூடாந்நிவிருத்த : ।
ஸாபிச்ஞாநப்ரஹித குசலை :
ஸ்தத்வ சோபிர் மமாபி
ப்ராத: குந்த ப்ரஸவ சிதிலம்
ஜீவிதம் தார யேதா : ।।

முதல் முதல் வியோகத்தின் தீவிரமான சோகத்தால் என் சகியிடம் இவ்விதம் ஆறுதலான வார்த்தைகளைச் சொல்வாய்!

சிவனாருடைய நந்தியினால் விழுங்கப்பட்ட சிகரங் களைக் கொண்ட கைலாசத்திலிருந்து சீக்கிரம் திரும்பி வந்து அடையாளச் சின்னமாக உன்னிடம் கூறிய குசல சமாசாரங்கள் நிரம்பிய வசனங்களுடன் காலையில் மலர்ந்த குந்த புஷ்பத்தின் குளுமை போல் என் ஜீவனுக்கு உதவி செய்யக் கூறுவாயாக!

பாடல் : 54

கச்சித்ஸௌம்ய வியவஸிதமிதம்
பந்துக்ருத்யம் த்வயா மே
ப்ரத்யாதேசாந்ந கலு பவதோ
தீ ரதாம் கல்பயாமி ।

நி: சம்தோபி ப்ரதிஷேஸி
ஜலம் யாசிதச் சாத கேப்ய:
ப்ரத்யுக்தம் ஹி ப்ரணயிஷு
ஸதாமீப்ஸிதார்தக் ரியைவ ||

"ஹே ஸௌம்ய! என் காரியத்தைச் செய்ய நீ மறுத்தாயா? உன்னுடைய மௌனத்திற்கு காரணம் என்ன? ஆனால் உன் மௌனத்தை நான் அங்கீகாரம் என்று எண்ணவில்லை. பிரார்த்தனை செய்தால் சாதகப் பக்ஷிக்கு கூட நீ ஜலம் கொடுக்கிறாய்.

ஸந்ஜனங்களின் லக்ஷணம் யாதெனில் கூறிய காரியத்தைப் பூராவும் செய்து கொடுப்பது தான். யாசகர் களுக்கும் உதவி கிடைக்கிறது.

## பாடல்: 55

ஏதத்க்குத்வா ப்ரிய மநுசித
ப்ரார்தநா வர்திநோ மே
ஸௌஹார்தாத்வா விதுர இதி
வா மய்யநுக்ரோச புத்தயா |
இஷ்டாந் தேஷாஞ்ஜலத விசர
ப்ராவ்ருஷா ஸம்ப்ருத ஸ்ரீ
ர்மா பூதேவம் க்ஷணமபிச
தே வித்யுதா விப்ரயோக: ||

"ஹே மேகமே! சிநேகத்தின் காரணமாக அல்லது உன் மீது சிரத்தையினால் நான் உன்னிடம் கூறுகிறேன். என் மீது தயவு செய்து உசிதமான ப்ரார்த்தனை செய்யும் என் இந்த பிரிய காரியத்தைச் செய்வாய்.

வர்ஷா ருதுவினால் பெருகி இருக்கும் சோபையுள்ள நீ உன் அபிலாக்ஷித் தேசங்களைத் தாண்டி நன்றாக பிரயாணம் செய்து உன் மின்னலை அடிக்கடி உண்டாக்கு! என் மாதிரி க்ஷண நேரம்கூட உன் மின்னலை விட்டு வைக்காதே!

### பாடல் : 56

இத்யாக்யாதே சுரபதிஸக:
　　ஷைலகுல்யா புரீஷீ
ஸ்தித்வா ஸ்தித்வா தனபதி புரீம்
　　வாஸரை: கைச்சிதாப ।
மத்வாகாரம் கன கருசிரம்
　　லக்ஷணை: பூர்வமுக்தை:
தஸ்யோத் ஸங்கே க்ஷிதிதலதம்
　　தாம் ச தீநாம் ததர்ஷ ॥

இம்மாதிரி யக்ஷன் கூறிய பின் மேகம் பர்வதங்களையும், சிறு சிறு நதிகளையும், நகரங்களையும் கடந்து சிறிது நாட்களில் குபேரனின் நகரமான அளகாபுரி வந்து சேர்ந்தது.

முன்னால் கூறிய லக்ஷணப்படி தங்கமயமாக ஜொலிக்கும் பவனங்களைத் தெரிந்து கொண்டு உள்ளே பூமியில் கிடக்கும் அந்த துக்கமுள்ள யக்ஷ பத்தினியைப் பார்த்தது.

### பாடல் : 57

தஸ்மாதத்ரே நிககிதுமதோ
　　சீக்ரமேத்யாலகாயாம்
யக்ஷாகாரம் விகலித நிபம்
　　த்ருஷ்டஸிஹனைர் விதித்வா ।
யத்ஸந்திஷ்டம் ப்ரணய மதுரம்
　　குஹ்யகேன ப்ரயதநா—
த்தத்கேஹின்யா: ஸகலமவ—
　　தத் காமரூபீ பலோத :॥

இதன் பிறகு தன் இஷ்டப்படி ரூபத்தை மாற்றிக் கொள்ளும் மேகம் சந்தேசம் சொல்வதற்காக பர்வதமலையிலிருந்து சீக்கிரம் இறங்கியது.

யக்ஷன் சொன்ன அடையாளங்களைக் கொண்டு, சோபையில்லாத யக்ஷினின் வீட்டைத் தெரிந்து கொண்டது. யக்ஷன் எவ்விதமான ப்ரணய சந்தேசம் கூறினானோ அதை அவன் மனைவியிடம் கூறியது.

பாடல் : 58

தம் ஸந்தேசம் ஜலதரவரோ
 திவ்யவாசாங்கசச க்ஷே
ப்ராணாம்ஸ்தஸ்யா ஜனஹிதரதோ
 ரக்ஷிது யக்ஷவத்வா: ।
ப்ராப்யோதந்தம் ப்ரமுதிதமநா:
 ஸாபி தஸ்தௌ ஸ்வபர்து:
கேஷாம் ந ஸ்யாதபிமதபலா
 ப்ரார்தனா ஹ்யுத்தமேஷு ॥

ஜனங்களுக்கு நன்மை செய்யும் காரணமாக இருக்கும் மேகம் யக்ஷ பத்தினியின் உயிரைக் காக்க திவ்யமான வாணி மூலம் சந்தேசத்தைக் கூறியது.

அவளும் தனது பதியின் சந்தேசத்தைக் கேட்டு சந்தோஷத்துடன் இருக்கலானாள். உத்தம் வியோகத்தினால் கூறப் பட்ட பிரார்த்தனை அபிஷ்ட பலனைக் கொடுக்காமலா போகும்?

பாடல் : 59

ச்ருதவா வார்தா ஜலதககிதம்
 தாம் தனேஷோபி ஸத்ய:
சாபஸ்யாந்தம் ஸதயஹ்ருதய:
 ஸம்விதாயாஸ்த கோப: ।
ஸம்யோஜ்யைதௌ விகலிதசுசௌ
 தம்பதீ ஹ்ருஷ்டசித்தௌ
போகாநிஷ்டாநவிரதஸுகம்
 போஜயாமாஸ ஷஷ்வத் ॥

